# தீபாவளி

இரவில் சிறிய அகல் விளக்குகள் மினுமினுக்கின்றன; வெடிகள் முழங்குகின்றன, மத்தாப்புகள் ஜுவலிக்கின்றன; சிறுவர்கள் கோஷமிடுகிறார்கள். தீபாவளி புன்னகையும் வாழ்த்துக்களும் வரவேற்கின்றன. தேர்ந்தெடுத்த பொருள்கள் பண்டிகை பட்சணங்கள் அவர் வரவை எதிர்பார்க்கின்றன ஆயினும், தீபாவளி பண்டிகையின் ஆனந்தத்தை இன்னும் அதிகப்படுத்துவது புத்துணர்ச்சியளிக்கும் நறு மணமுள்ள ஒரு கப்

**ப்ரூக் பாண்ட் டீ.**






**ப்ரூக் பாண்ட் தேயிலை**

இந்தியாவின் சிறந்த தேனீர்

# நீங்கள் இன்று உங்கள் பற்களை மக்ளீன்

# செய்தீர்களா?




ஆமாம். அவள் தனது பற்பசையை நன்கு தேர்ந்தெடுத்திருக்கிறாள் என்பதை நீங்கள் காணலாம். அவள் புன்னகையின் மூலம் தனது பளபளப்பான பற்களைக்காட்டிப் பெருமைப்பட்டுக்கொள்கிறாள். மக்ளீன் பெராக்ஸைட் பற்பசை பற்களை வெண்மையாக்குவதுடன் விடவில்லை. ஈறுகளுக்கு வலுவும் ஆரோக்கியமும் அளித்து சுவாசத்தை இனிதாக்குகிறது. இன்றே மக்ளீன் உபயோகிக்கும் பழக்கத்தை ஆரம்பியுங்கள். மக்ளீன் பொரக்ஸைட் பற்யசையை இன்று முதல் தினமும் இருமுறை உபயோகியுங்கள்.




**பற்களை அதிக வெண்மை யாக்குகிறது**

வர்த்தக விவரங்களுக்கு:
ஜே. எல். மாரிஸன், ஸன் அண்ட் ஜோன்ஸ் (இந்தியா) லிமிடெட்,
தபால் பெட்டி 6527 பம்பாய், தபால் பெட்டி 387 கல்கத்தா, தபால் பெட்டி 1370 மதராஸ்.

MTY-12 TAM.

# தீபாவளி ரிலீஸ்



# வளையாபதி

சென்னை
பிரபாத்
கெயிட்டி
ஸரஸ்வதி
மற்றும் தமிழ் நாடெங்கும்.....

**மாடர்ன் தியேட்டர்ஸ்**
தயாரிப்பு...

டைரக்ஷன்-
T.R.சுந்தரம் & மஸ்தான்



# கடாவ்
## வாயில்





# பெர்குஸன் குடும்பம் —



## மொத்தவியாபாரிகள், விற்பனையாளர்கள் வினியோகஸ்தர்கள் —













## உங்களுக்கு சிறப்புற்ற தீபாவளியும் சீர்மிகு புதுவருஷமும் உண்டாக வாழ்த்துகிறோம்



## காமானி எஞ்சினீயரிங் கார்பொரேஷன் லிட்.
பம்பாய்

டீலர்கள் :-காமனி இன்ஜினியரிங் கார்ப்பரேஷன் லிட்., சாகர்மான்ஷன், ஜோன்ஸ் தெரு, பிராட்வே, மதராஸ்–1,
ஸ்டேன்ஸ் மோட்டார்ஸ் (தென் இந்தியா) லிட்., கோயம்பத்தூர்.
வெப்ஸ் பார்ம் மெகானிஸேஷன், 30, மகாத்மா காந்தி ரோடு, பெங்களூர் & மைசூர்.

ஸ்டாக்கிஸ்ட்கள் :-காமினேனி பார்மிங் கார்ப்பரேஷன், வராஹபட்டினம் & குடிவாடா. S. பாப்பண்ண செட்டி; ஹோஸ்பேட். சுந்தரம் ஸன்ஸ், 67 பிரிட்ஜ் ஸ்டேஷன் ரோடு தல்லாகுளம் P. O. மதுரை: பார்மிங் மெஷினரி & சர்வீஸஸ், பெஸன்ட் ரோட், பக்கிங்ஹாம்பேட் போஸ்ட், விஜயவாடா: கள்ளிக்கோட்டை, உதகமண்டலம், திருவனந்தபுரம் எலக்டிரிக் டைஸல் எக்குப்மெண்ட் கம்பெனி, அல்லபி; A. கோபாலகிருஷ்ணன் கோட்டாரம் கல்பட்டா வெய்நாடு.




ஷெல்



X-100 மோடார் ஆயில்

BSY 183 TM

# காவேரி




நந்தன மலர் 12 | ஐப்பசி இதழ் 3



**குறிப்பு:**
'காவேரி'யில் வெளியாகும் கட்டுரைகளிலுள்ள பெயர்கள் கற்பனைப் பெயர்கள். அவைகளில் அடங்கிய அபிப்பிராயங்களும் அவற்றை எழுதியவர்களுடையனவே. அவைகளுக்குப் பத்திரிகாசிரியர் பொறுப்பாளியல்ல.

# மேன்மையின்

## பெருமை அநேக வருஷ

## உழைப்பிற்குப் பின்னும் விளங்கும்



ஸைக்கிள்கள்

ஸைக்கிள் சாமான்கள்

பெராம்புலேட்டர்கள்

குழந்தை வண்டிகள்

இவைகளில்

உயரிய ரகத்திற்கு



நம்பி வாங்க

# இங்கிலீஷ் சைக்கிள் & மோட்டார்

இம்போர்டிங் கம்பெனி லிமிடெட்

*2/9 பிராட்வே :: :: மதராஸ் 1.*

*தந்தி :—"ஸைக்கிள்ஸ்"* *போன்: 3168*

# காவேரி

நந்தன ௵ மலர் 12

"சென்றிடுவீர் எட்டுத்திக்கும்—கலைச்
செல்வங்கள் யாவும் கொணர்ந்திங்கு சேர்ப்பீர்"—பாரதியார்

இதழ் 3

## டில்லித் தபால்

கே. ஸ்ரீநிவாஸன்

"காஷ்மீர் பிரச்னை ஆரம்பித்த பொழுது எங்கு இருந்ததோ அந்த இடத்தை விட்டு மிகவும் நகர்ந்ததாகச் சொல்ல முடியாது" என்று காஷ்மீர் சர்க்காரைச் சேர்ந்த ஒரு பிரமுகர் கூறினார். அவர் சமீபத்தில் நடந்த ஜினிவா பேச்சு வார்த்தைக்குச் சென்று திரும்பியவர்.

டாக்டர் கிரஹம் தம் துருப்பு ஆயுதப் பரிஹரண வேலையை மேற்கொண்டது இறுதியில் பொதுஜன வாக்கெடுப்பு எடுப்பதற்கு வேண்டிய சூழ்நிலை ஏற்படுத்தவே. இரு தரப்பிலும் ராணுவம் அளவு மீறி இருந்தால் அது நியாயமான முறையில் வாக்கெடுக்கச் சௌகரியப்படாது என்றே டாக்டர் கிரஹம் நியமிக்கப்பட்டார். வாக்கெடுப்புப் பரிபாலகராக நியமிக்கப்பட்ட அட்மிரல் செஸ்டர் நிமிட்ஸ் தம்முடைய பதவியை வகிக்கவே வழி யில்லாமற் போயிற்று.

இந்தியா சம்பந்தப்பட்ட வரையில் காஷ்மீர மண்ணில் பாகிஸ்தான் துருப்புகள் இன்னும் நீடித்து இருக்கத் துளிக்கூட நியாயம் இல்லை. முதலில் தனக்கு ஒன்றுமே தெரியாது என்று வேஷம் போட்ட பாகிஸ்தானின் பக்கா ராணுவம் காஷ்மீரில் இருக்கிறது என்ற உண்மை ஊர்ஜிதம் ஆகியும் ஐக்கிய நாட்டு ஸ்தாபனம் இந்த உண்மையைத் தெரிந்து கொண்டதாகவே காண்பித்துக்கொள்ள இசையவில்லை.

சமீபத்தில் நடந்த ஜினீவா பேச்சு வார்த்தைகளில் ஸ்ரீ என். ஜி. கோபாலஸ்வாமி ஐயங்கார் மறுபடியும் அடித்துக் கூறியது பாகிஸ்தானுக்கு இந்தியத் துருப்புகள் நிர்ணயம் செய்யும் விஷயத்தில் பேசுவதற்கு எவ்விதமான உரிமையும் கிடையாது என்று. காஷ்மீரத்தில் தற்காலிக யுத்த நிறுத்தத்திற்குப் பிறகு பிடாரிகள் என்று சொல்லப்பட்ட எல்லைப்புறக் குண்டர்களை நன்றாகப் பயிற்சி செய்வித்து அவர்களையும் அசல் ராணுவஸ்தர்களாகச் செய்துவிட்டார்கள். ராணுவஸ்தர்களை வெளியேற்றும்பொழுது இந்தப் பிடாரி ராணுவத்தையும் கூடவே வெளியேற்றவேண்டும் என்று வாதாடினார், ஸ்ரீ என். ஜி. மேற்கத்திய நாடுகள் சம்பந்தப்பட்ட வரை காஷ்மீரப் பிரச்னையில் இதுவரை இந்தியாவுக்குக் கிடைத்துவந்த மாற்றாந்தாய் மனப்பான்மை மாறும். இதற்குக் காரணம் மூஸ்லீம் நாடுகளான ஈரான், எகிப்து முதலியன பிரிட்டனுக்கும் பிரான்ஸுக்கும் கொடுத்து வரும் உதையே என்பது அறிந்த வட்டாரங்களின் கருத்து.

நிற்க, காஷ்மீர் மகாராஜா விஷயமாக மற்றொரு அநீதி இழைக்கப்படுகிறது. மகாராஜாவுக்குப் பதிலாகவே யுவராஜாவைத் தாற்காலிக பரிபாலகராக நியமித்திருந்தார்கள். சமீபத்தில் காஷ்மீரச் சர்க்கார் யுவராஜாவையே முதல் குடியரசு ராஜப் பிரமுகராகச் செய்யத் தீர்மானித்த பொழுது மகாராஜா ஜனாதிபதிக்கு தம் நிலையை விவரித்து, தம்முடைய முடியைப் பரிஹரணம் செய்வது அநியாயம் என்று தெரிவித்தார். அதில் தம் சொந்தப் பணமான சுமார் ரூ. 35 லக்ஷம் காஷ்மீருக்குச் செலவிட்டிருப்பதாகவும் அது தமக்குத் திரும்பக் கிடைக்கவேண்டும் என்றும் தெரிவித்திருந்தார். இந்த விண்ணப்பத்தை இந்திய சர்க்கார் நிராகரித்ததுடன், ஸ்ரீ நேரு மகாராஜாவை, சுதாவாகவே தம் முடி உரிமையை விட்டுவிடும்படி ஆலோசனை சொல்லியிருந்தார்.

காஷ்மீரத்தில் மகாராஜாவின் மூதாதையர்களின் மூலதனத்தைக்கொண்டு நிறுவப்பட்ட தர்மார்த்த டிரஸ்ட்மேல் ஸ்ரீ அப்துல்லா பாய்ந்திருக்கிறார். ஒரு கோடி ரூபாய்க்குமேல் நிதிகொண்ட இந்த டிரஸ்டுக்கு மகாராஜாதான் பிரதம டிரஸ்டி. டிரஸ்ட் மூலதனங்கள் மூலம் கிடைப்பவை தர்ம காரியங்களுக்காகச் செலவிடப்படுகின்றன. இவ்வளவு பெரிய

மூலதனத்தைச் சும்மாவிடவாவது என்று ஸ்ரீ அப்துல்லா இந்த டிரஸ்ட் பணம் காஷ்மீருக்கு விரோதமாக நடக்கும் பிரஜாபரிஷத் கிளர்ச்சிக்குச் செலவிடப்படுகிறது என்று கூறி டிரஸ்டைச் சர்க்கார் மேற்கொள்ளவேண்டும் என்ற குதர்க்கத்தைக் கிளப்பியிருக்கிறார். மகாராஜாவும் சரி, மற்ற டிரஸ்டிகளும் சரி, ஸ்ரீ அப்துல்லாவின் கூற்று அபாண்டமானது என்று மறுத்துவிட்டபோதிலும் காஷ்மீரில் நிலவும் நியாயவேகம் டிரஸ்ட் ஒன்றுமில்லை என்று முடிவுகட்டி, சர்க்கார் எடுத்துக் கொண்டுவிடலாம் என்று எதிர்பார்க்கப்படுகிறது. ஆடுதுறை ஆதீனத்தை அமல் நடத்த அய்யம்பேட்டை அப்துல் சத்தார் டிரஸ்டியாலுல் எவ்வளவு நியாயம் பிறக்குமோ அவ்வளவு நியாயம்தான் இப்பொழுதும் காஷ்மீரத்தில் கிடைக்கும்.

ஊருக்கு இளைத்தவன் பிள்ளையார் கோவில் ஆண்டி என்பது பழமொழி. தொழிலாளிகளில் இளைத்தவன் கைத்தறி நெசவாளி என்பது இப்பொழுது மிகவும் பகிரங்கம். முன்நாளில் கைத்தறித் துணி மிகவும் குறைவாக உற்பத்தி செய்யப்பட்டிருந்த பொழுது "கைத்தறித் துணியை நம்பி எந்தக் கொள்கையும் மேற்கொள்ள முடியாது" என்று சொல்லிக் கொண்டிருந்தார்கள். பஞ்சு வேண்டிய அளவில் கிடைக்காமலிருந்த பொழுது கைத்தறியாளருக்குத் தேவையான நூலில் கால் பங்குகூட கிடைக்கவில்லை. பஞ்சு நிலைமை அபிவிருத்தி அடைந்து நூல் துணி உற்பத்தி அதிகரித்த பொழுது தறிக்காரர்களுக்குப் பெர்மிட் மூலம் நூல் கொடுக்கப்பட ஏற்பாடு செய்யப்பட்டது என்றாலும் ஏற்பாடு வெகுவாகக் காகிதத்திலேயே அமல் நடந்தது. மில் முதலாளிகள் கைத்தறியாளர்களுக்கு வேண்டிய 80 கௌன்ட் நூல் கட்டுகள் கொடுப்பதற்கு ஏதோ தானம் கொடுக்கத் தயங்கும் கருமியைப் போல் கதறினார்கள். பலன்: தறிகள் நூல் இல்லாது மூடவேண்டி வந்து பல்லாயிரம் தொழிலாளர்கள் பிச்சை எடுக்க நேர்ந்தது.

இப்பொழுது எதற்குக் குறைவு? நூலிற்கா? அல்லது நெய்த துணிக்கா? இரண்டிற்கும் இல்லை. கடின நெஞ்சு மில் முதலாளிகளின் தாராள குணத்திற்குத்தான் குறைவு. மில்லாடை உற்பத்தி தினந்தினம் பெருகி மார்க்கெட்டில் மிதிபடுகிறது. துணி ரேஷன் கடைகளும் துணிக்காக, "கியூ"க்களும் பழங் கதையாகிவிட்டன. மார்க்கெட்டில் விலை குறைந்த ரகம்; தரம் மலிந்த துணிகளையே ஏழைகள் விரும்புகிறார்கள்.

இந்த நிலையைப்பற்றிச்சொல்லி, கைத்தறியாளர்களின் துயரத்தை நீக்க ராஜாஜி ஒருவருக்குத்தான் தைரியம் இருக்க முடியும். "12-ல் ஒருவன் கைத்தறித் தொழிலாளி, அவனைப் பட்டினி போடாதே" என்ற குரல் பல லக்ஷம் பொதுமக்களின் உள்ளத்தைத் தொட்டிருக்கிறது என்றாலும் கைத்தறித் தொழிலில் துணிச் சரக்கு பிரம்மாண்டமாகக் குவிவதைத்தவிர்க்க, தனிப்பட்ட நபர்கள் அனுதாபம் மட்டுமே மிகவும் உபயோகப்படாது. மிகுந்தால் பசித்த யானைக்கு சோளப் பொரி அளிப்பதைப் போன்றது.

இதை உணர்ந்துதான் வைர நெஞ்சம் படைத்த ராஜாஜி "மில் முதலாளிகள் உற்பத்தி செய்யும் சேலைகளின் தினுசுகளும் அவைகளின் கரைகளும் கைத்தறி தொழிலிருந்து திருடப்பட்டவை. நியாயமாக வேஷ்டி, சேலை உற்பத்தி உரிமை கைத்தொழிலாளிகளுக்கு மட்டுமே இருக்கவேண்டும்" என்று கூறினார். மில்கள் வேஷ்டி, சேலைகள் உற்பத்தி செய்யக்கூடாது என்று ராஜாஜி சொன்னபொழுது அந்தத் தடை ஒன்றே கைத்தறித் தொழிலை ஓங்க வைக்கும் என்ற தீர்மானத்துடன் சொன்னார்.

எவ்வளவு தான் விவேகி என்றாலும் வர்த்தக மந்திரியாகி விட்டால் யாருக்கும் அந்த இலாகாக் காரியதரிசிகள் கிழித்த கோட்டைத் தாண்டத்தைரியப்படுவதில்லை. மில் முதலாளிகள் நினைத்த பொழுதெல்லாம் விலையேற்றம் அளித்து, அவர்களின் பணப்பை குறையாமல் பார்த்துக்கொண்டிருந்த ஊழல் நிறைந்த வர்த்தக இலாகா ராஜாஜியின் யோசனையை எப்படி ஒப்புக்கொள்ளும்?

இந்திய சர்க்கார் ஆறுதல் எல்லாம் காலணாவுக்குப் பிரயோஜனம் இல்லை. கைத்தறிச் சேலைகளையும் வேஷ்டிகளையும் விரும்பாதவர் இந்தப் பக்கங்களில் இல்லை ஆனால் இங்கு அவைகளை விற்கும் கடைகள் பகல் கொள்ளைக் கடைகள். ஆறு கெஜம் துணிப் புடவை சென்னை கைத்தறி கோவாபரேடிவ் சொஸைடியில் உயர்ந்தால் ரூ. 15 இருக்கலாம். அதையே புதுடில்லி மலை விழுங்கிகள் ரூ 30 முதல் 50 வரை விற்கிறார்கள். கைத்தறி துணிக்குப் புதுப்புது மார்க்கெட்கள் தேவை. அந்தத் தறிச் சங்கத்தார் தன் கையே தனக்கு உதவி என்று இந்தப் பக்கங்களில் பிரசாரம் செய்வதுடன் தங்கள் டிப்போக்களையே திறக்கத் தீர்மானித்தால் இங்குள்ள தென்னிந்திய சமூகம் துணிகளைத் தாங்களே ஆதரிப்பதுடன் இங்குள்ள பஞ்சாபிகள், உத்தரப் பிரதேசக்காரர்கள் முதலியவர்களிடையே அவைகளைப் பரப்ப உதவத் தயார். ●

# உள்ளத்தில் வறுமை

**ஸ்ரீதரம் குருஸ்வாமி**

“சும்மா இருக்கிற பரதேசிக்கு இரண்டு பட்டை” என்று ஜாப்தாவில் பார்த்ததும் புதிய தாமகர்த்தாவிற்கு ஆத்திரம் உண்டாயிற்று. கோவில் கணக்குகள் இன்னின்ன விதம் என்று புரிந்து கொள்வதற்காக அன்று தான் முதல் முதல் அவர் வஸந்த மண்டபத்தில் உட்கார்ந்து கொண்டு கணக்குப் பிள்ளை கொண்டு வைத்த புஸ்தகத்தின் ஏடுகளைப் புரட்டினுர். ஒவ்வொரு இனமும் சரியாக இருந்தது. அர்ச்சகர், சுயம்பாகி முதல் மேளம், திருமாலைகட்டி மெய்காவல் வரையில், வெளிப்பிராகாரத்தில் வாய் மூடி ஒரு வேலையும் செய்யாமல் உட்கார்ந்திருக்கும் பரதேசிக்கு இரண்டு பட்டைச்சோறு, என்று கடைசியில் சேர்த்திருப்பது மாத்திரம் அக்கிரமமாகப்பட்டது அவருக்கு. இது தேசாந்தரிக் கட்டளையில் சேர்ந்ததல்ல; அந்தப் பரதேசி தேசாந்தரியும் அல்ல. உலக அனுபவ ஞானம் நிறைந்தவரான தம்முடைய தந்தை அவருடைய காலத்திலேயே ஏன் இந்தத் தப்பிதத்தை நிவர்த்தி செய்யவில்லை? இன்றையிலிருந்து அந்த இரண்டு பட்டை கொடுப்பதை நிறுத்திவிடும், தெரிந்ததா! ஒரு பட்டை மாடு மேய்ப்பவனுக்கும், ஒரு பட்டை பாத்திரம் தேய்ப்பவளுக்கும், சேர்த்துக் கொடும்!” என்று உத்தரவிட்டு விட்டுத் தர்மகர்த்தா எழுந்து போய்விட்டார்.

போகும் போது பரதேசியை அவர் முறைத்துப் பார்த்துவிட்டுப் போனுர். பரதேசியின் முகத்தில் எப்போதும் போல் ஒரு அசட்டுச் சிரிப்புத்தான், வேறு ஒரு மாறுதலும் இல்லை. யாரைப் பார்த்தாலும் அந்தச் சிரிப்பைத் தவிர, வார்த்தையாக எதுவும் அந்தப் பரதேசியின் வாயிலிருந்து வந்ததில்லை, ஒரு சமயம் சிறு குழந்தையைப் போல் இருக்கும், அந்தப் பார்வை; ஒரு சமயம் அசல் பைத்தியம் போலவும் இருக்கும். காரணமே இல்லாமல் புன்னகை பூத்து நிற்கும் ஒரு முகத்தைக் கண்டால் வேறு என்ன தான் ஒருவருக்குத் தோன்ற இடமுண்டு? காலையில் வெளியில் எழுந்து போய்த் திருக்குளத்தில் நீராடித் தம் இடத்தில் வந்து இவர் உட்கார்ந்து கொள்வார். மறுநாள் காலை வரை அதைவிட்டு அவர் அசைவதில்லை. தினந்தினம் இப்படியே.

இரண்டு நாள் கழித்துத் தர்மகர்த்தா கோவிலுக்குள் நுழைந்த போது அதே புன்னகை அவரை அன்புடன் வரவேற்றது. நாலு நாள் கழித்து மறுதடவை அவர் வந்த போதும் அப்படியே. பரதேசியின் உடம்பில் ஒரு வாட்டமும் சோர்வும் காணப்படடதே தவிர, முகத்தில் நிலாப் போல் வீசிய அந்த அர்த்தமற்ற சிரிப்பு அதே களையோடு பொங்கி வழிந்தது.

“அந்தச் சோம்பேறிக்கு யார் இன்னும் சோறு போடுகிருர்கள்?” என்று தர்மகர்த்தா கணக்கப்பிள்ளையைக் கேட்டார்.

“அவர் சோம்பேறியல்ல, அவர் ஒரு மஹான்!” கிழவரான கணக்கப்பிள்ளைக்குத் தர்மகர்த்தாவுடன் எதிர் நின்று பேச இப்போது கொஞ்சம் தைரியம் வந்து விட்டது.

“நம் தேசத்தில் ஒவ்வொரு திண்ணைத் தூங்கியும் ஒரு மஹான் தான். இல்லாவிட்டால் தேசம் ஏன் இப்படிக் குட்டிச்சுவராச் சீரழிந்து போகிறது?” என்று தர்மகர்த்தா பொருமினுர்.

“ஒரு நாள், இருபத்து நாலு மணி நேரம் அதாவது அறுபது நாழிகை, அவரைப் போல் சும்மா கை கட்டி ஒரே இடத்தில் உட்கார்ந்திருக்க நம் யாராலும் முடியாது” என்று இழுத்தாற் போல், வினயமாக, கணக்குப்பிள்ளை பதில் சொன்னுர்.

“ஏன் சோறு போடுகிறவர்கள் போட்டால், பேஷாக இருக்கலாம். நான் கூட இருப்பேன்!”

அன்று பேச்சு அதோடு முடிந்தது. ஆனுல் தர்மகர்த்தாவின் மூளையில் விதை போல் விழுந்த அந்தக் கருத்து சும்மா இருக்கவில்லை? அங்கே முளை விட்டுத் தலை தூக்க ஆரம்பித்தது.

ஒரு நாலு மணி நேரம் பேசாமலும் படிக்காமலும் எழுதாமலும், ஒரு காரியமும் செய்யாமல் உட்கார்ந்து பார்ப்பது, என்று அவர் பரீக்ஷை பார்த்துத் தோல்வி அடைந்த பிற்பாடுதான் அந்தப் பரதேசியின் நிலை அவர் கற்பனைக்கு ஓரளவு எட்டியது. 'தாம் இருக்கும் இடம்தேடி வந்து அமுது அளித்தால் உண்போம்' என்ற பட்டினத்தாரின் வாக்கு அவருடைய காதில் ஒலித்தது. 'சும்மா இருத்தலே சிவம்' என்ற வாக்கியத்தின் அர்த்தத்தை அவர் ஆராய ஆரம்பித்தார். பொருளாதாரத் துறையிலே பரோபகார சிந்தை இடம் பெறுவது எப்படி என்ற எண்ணம் வந்த போது, ரஸ்கின் என்ற அறிஞர் எழுதிய நூல்களை அவர் நினைவுகூர்ந்தார் டால்ஸ்டாயின் சித்தாந்தமும் அவர் அறியாததல்ல. 'மனிதனுக்கு இங்கே தேவையானது மிகச் சொற்பம்; அந்தச் சொற்பமும், மிகச் சொற்ப காலத்திற்கே' என்ற கவிஞர் கோல்ட்ஸ்மித்தின் அடிகளை அவருடைய வாய் முணுமுணுக்க ஆரம்பித்தது.

பரதேசிக்கு முன் போலவே தினம் இரண்டு பட்டை சோறு புதிய தர்மகர்த்தா காலத்திலும் சாங்ஷன் ஆயிற்று.

தேசம் சீரழிந்து போவதைத் தடுக்க உழைப்பு அவசியம். எவ்வகையான உழைப்பு அவசியம்? உழைக்க வேண்டியவர்கள் யார்?

இந்தியாவைச் சுற்றிப் பார்க்கும் அயல் நாட்டாரும், அயல் நாடுகளைச் சுற்றிப் பார்த்துவந்த இந்தியரும், ஏகோபித்து ஒரே அபிப்பிராயத்தை வெளியிடுகிறார்கள். அதாவது, இந்தியரின் வாழ்க்கைத்தரம் மிகவும் தாழ்ந்து இருக்கிறது; அதை உயர்த்த எல்லோரும் முன் நின்று பாடுபடவேண்டும், என்பதே.

வாழ்க்கைத் தரம் என்பது என்ன? வசிப்பதற்கு விசாலமான நவீன ஆரோக்கிய வசதிகளுடன் கூடிய வீடு, நாகரிக உடைகள், பலவகைச் சத்துக்கள் நிறைந்த பூரண உணவு, மேனாட்டுக் கல்வி, தொழிற்சாலைகள், பொழுதுபோக்குச் சாதனங்கள், கலை.

இவை அத்தனையும் அமெரிக்காவில் உண்டு, ஐரோப்பாவில் உண்டு; இந்தியாவில் இல்லை—என்ற அடிப்படையில்தான் பிரசாரம் நடைபெறுகிறது.

இயந்திர நாகரிகம் வளர்ச்சிபெற்ற நாடுகளில் வாழ்க்கைத்தரம் எவ்வளவு உயர்ந்திருக்கிறது? தலைக்கு இத்தனை பவுன், அல்லது டாலர், வருமானம் என்று புள்ளி விவரங்கள் வரும்போது, அதை ரூபாயாக மாற்றிக் கணக்கிட்டுப் பார்த்தால், அப்பா! இந்தியா எவ்வளவு ஏழைமை நிறைந்த நாடு என்பது புலனாகிறது.

ஆனால், அதே நேரத்தில், ஐந்நூறு டாலரைக்கொண்டு அமெரிக்கன் என்னென்ன பொருள்கள் வாங்குகிறான், எவ்வகை வாழ்க்கை நடத்துகிறான்; அதில் இரண்டு சத விகிதமேயான ஐம்பது ரூபாயைக் கொண்டு இந்தியாவில் இந்தியர் எவ்வகை வாழ்க்கை நடத்திவருகிறார்கள் — என்று யாருமே ஒப்பிட்டுப் பார்ப்பதில்லை. 'வருஷம் ஆறாயிரம் டாலர் வருமானத்தில் வாழ்க்கையில் தோற்றுநிற்பது' (going Broke on Six Thousand Dollars a Year) என்ற நூலை அவர்கள் படிக்கவேண்டும்; தீவிரமாகச் சிந்தனை செய்யவேண்டும்.

இருபது ரூபாயில் முந்திய தலைமுறையில் வாழ்க்கை துவக்கியவர்கள் பெற்ற சௌகரியங்கள் இருநூறு ரூபாயில் இன்று குடும்பம் நடத்த முற்படுபவர்களுக்குக் கிடைக்குமா? 'என் தகப்பனார் நாற்பது ரூபாயில் ரிடையர் ஆனார்; நான் நானூறு ரூபாய் வாங்குகிறேன்' என்று பெருமையோடு சொல்லும் ஒருவருடைய வாழ்க்கைத்தரம் அவருடைய தகப்பனாருடைய வாழ்க்கைத் தரத்தைவிடப் பத்து மடங்கு உயர்ந்துவிட்டதாக ஆகுமா?

பண்டங்களின் விலையை உயர்த்துவது; இலவசமாகக் கிடைத்துவந்த பண்டங்களுக்கும்கூட விலை ஏற்படுத்துவது; அதற்கேற்றாற்போல உழைப்பின் ஊதியத்தையும் உயர்த்துவது—இதுவே மேலைநாட்டின் பண்பாடு.

படிப்படியாக விலை ஏற, வருமானம் உயரும்; வருமானம் உயர. விலை ஏறும். கடைசியில் பணக் கணக்கைக் கொண்டு பிரசாரம் செய்தால், வாழ்க்கைத்தரம் உயர்ந்துவிட்டதைப்போல ஒரு பிரமை. காலணா கொடுத்து அந்த நாளில் வாங்கிய மாம்பழத்தை இன்று நாலணா அலக்ஷியமாக வீசி எறிந்து வாங்கிவிட்டால், நம் வாழ்க்கைத் தரம் பதினாறு மடங்கு உயர்ந்துவிட்டதாகப் பெருமைகொள்ளலாம் அல்லவா!

மேலே நாடுகளில், வறுமை ஒழிந்துவிட்டதா? அங்கே ஏழைகளும் வேலையில்லாதவர்களும் இல்லையா? என்று யார் ஆற அமர யோசித்துப் பார்க்கிறார்கள்? மூக்கு இருக்கிறவரையில் ஜலதோஷம் உண்டு. இயந்திர நாகரிகம் பலம் பெறும் இடத்தில் வேலையில்லாத் திண்டாட்டமும் தொழில் நெருக்கடிகளும் கட்டாயம் உண்டு. செயற்கைப் பஞ்சத்திற்கு ஈடான பஞ்சம் ஏது?

ஆனால் ஒரு வித்தியாசம் இந்தியாபோன்ற நாடுகளில் அங்கங்கே கதியற்றவர்களுக்கு வீடுதோறும், கோவில்தோறும், சத்திரம் தோறும் அன்னமிட்டு வந்தார்கள்; இனிய மொழிகளால் உபசரித்து அன்னமிட்டார்கள்.

மேலே நாட்டில் அரசாங்கம் அந்தப் பணியை மேற்கொள்கிறது. ஊழல்களும் நிர்வாகச்சிக்கல்களும் செலவுகளும் சேர்கின்றன. இங்கே நம் ரஸ்தா நிர்வாகத்தைப் பற்றிச் சொல்வதைப்போல செலவழிக்கப்படும் ஒவ்வொரு ரூபாயிலும் கிட்டத்தட்ட நாலணாவாவது உத்தேசித்த காரியத்துக்காகக் கடைசியில் போய்ப் பயன்படுகிறதா என்பது சந்தேகம்.

இதில் வேடிக்கை என்னவென்றால், தனி மனிதன் தன்னுடைய கவலை தீர்ந்துவிட்டது; அந்தத் தலைவலி அரசாங்கத்தைப் போய்ப் பிடித்துக்கொண்டுவிட்டது; இனி தனக்கு என்ன?—என்று நிம்மதியாகப் பெருமூச்சு விடுகிறான், சந்தோஷப்படுகிறான்.

விழலுக்கு இறைத்த நீராகக் கோடிக் கணக்கான பணத்தை வீணாக்கும் அந்தச் சர்க்கார், அந்தப் பணத்தை வரியாக இவன் மீதே சுமத்தி, இவன் கழுத்தையே நெறித்து வசூல் செய்கிறது, என்பதை அந்தத் தனி மனிதன் என்றும் உணர்வதில்லை!

மோட்டார் உற்பத்தியின் கேந்திர ஸ்தானமான டெட்ராய்ட் (Detroit) என்னும் அமெரிக்க நகரத்தைச் சற்று எட்டிப் பார்ப்போம். டெட்ராய்ட் ஒரு சிறு உதாரணம் தான். அதற்குச் சொல்வது சற்று ஏறத்தாழ எந்த மேலே நாட்டு நகரத்துக்குமே பொருந்தும்.

வயதானவர்கள், கண் இழந்தவர்கள் முதலானவர்கள் போக, வேலையில்லாமல் கஷ்டப்படுபவர்களுக்கென்று மாத்திரம் தரப்படும் உதவியைப் பெறுபவர்கள் அந்த நகரத்தில் 17,502 பேர் இருந்தார்கள். மொத்த ஜனத் தொகையில் இது $1\frac{1}{2}$ சதவிகிதம். ஒரு வருஷத்தில் அவர்கள் பெற்று வந்தது 10,20,428 டாலர். இந்தப் பத்து லக்ஷம் சொச்சம் டாலர் செலவில் பாதியை டெட்ராய்ட் நகரசபை தந்தது; மற்றப் பாதியை மிஷிகன் நாட்டு அரசாங்கம் ஏற்று வந்தது.

புகார்கள் வந்தன, வாரச் சம்பளத்துக்கு ஆலைகளில் வேலை செய்கிறவர்களைவிட இவ்விதம் அரசாங்க உதவிபெறுபவர்கள் சீரான வாழ்க்கை நடத்தினார்கள், என்பதாக. வேலையில்லாதார் உதவித்திட்டத்தின்படி தங்களுக்குத் தரப்படும் தொகையைப் பெறும் பலர் கார் வாங்கினார்கள், ரேடியோ வாங்கினார்கள், நகைகள் வாங்கினார்கள்; செவ்வையாக உடுத்து உல்லாசமாகச் சுற்றினார்கள். இது எவ்வாறு?

விசாரணை மும்முரமாக நடந்தது. முடிவு என்ன? நியாயமாக உதவி பெற வேண்டியவர்கள் நூற்றுக்கு முப்பத்தேழு பேர்களுக்கு மேல் இல்லை. நூற்றுக்கு இருபத்தெட்டுப் பேருடைய நிலைமை கொஞ்சம் சந்தேகமாகச் சொல்லலாம். பாக்கியுள்ள முப்பத்தைந்து பேர் அவ்வித உதவி பெறுவதற்கே தகுதியற்றவர்கள்.

தண்ணீர்க்குழாய் வேலை செய்து ஒருவன் வாரம் நாற்பது டாலர் சம்பாதித்து வந்தான். அதில், வரி, இன்ஷ்யூரன்ஸ் கட்டணம், முதலானவை போக வாரம் முப்பத்து நாலு டாலர் தான் வீட்டுக்கு அவன் எடுத்துப் போக முடியும். "அதில் பஸ் சார்ஜ் வேறு. இப்போது வேலையில்லை என்பதற்காக எனக்கு மாசம் 175 டாலர் அரசாங்க உதவி கிடைக்கிறது. அதில் வரி முதலான சள்ளை கிடையாது. அங்கங்கே சில்லறை வேலைகள் செய்து நான் வேறு சம்பாதித்துக் கொள்கிறேன்" என்றான் அவன்.

ப்ளட் ப்ரெஷர், ஆஸ்மா, அதனால் வேலை செய்ய முடியவில்லை, என்பதாகப் பல காரணங்களைச் சொல்லி ஆறு குடும்பத் தலைவர்கள் தங்கள் குடும்ப சம்ரக்ஷணைக்காகப் பதினாலு வருஷங்களில் பெற்ற உதவித் தொகை மொத்தம் 1,70,000 டாலர் ஆகும்.

நகர இலாகா இன்ஸ்பெக்டர் சோதனைக்கு வருவது பகலில் தானே. பகலில் வீட்டில் தங்கி, வேலை இல்லாதவனென்று பதிவு செய்து கொண்டு, இரவில் 'நைட் ஷிப்ட்'டில் வேலைசெய்து சம்பாதித்ததோடு சர்க்கார் மாதா மாதம் கொடுத்த 227 டாலரை மேல் வரும்படியாகப் பெற்று, சுகம் அனுபவித்தவனைப் போன்ற 'கேசு'கள் பல இருந்தன.

குறித்த நாளில் குறிப்பிட்ட விலாசத்துக்கு வந்து, அங்கே தபாலில் வரும் செக்கைப் பெற்றுக்கொண்டு, பிறகு நகரத்துக்கு வெளியில் தன் குடும்பத்துடன் சொந்த வீட்டில் வாழ்ந்து வந்தவள், தன் கணவனால் கைவிடப்பட்டவள் என்பதாகத் தஸ்தாவேஜுகளில் பதிவானவள்.

இவர்களையெல்லாம் எக்கச்சக்கமான மான கேள்விகள் கேட்கக்கூடாது என்பது அரசாங்கச்சட்டம். 'ஒரு முறை விசாரணை நடத்தி அரசாங்க உதவி பெற லாயக்குள்ளவர் என்று உறுதி செய்யப்பட்டால், கிடைக்கும் உதவித் தொகையை எப்படியாவது அவர் பிறகு செலவு செய்து கொள்ளலாம். அது அவருடைய சொந்தப் பொறுப்பு' என்று அந்த நாட்டுச் சட்டம் சொல்கிறது. அதற்கு மேல் கேள்வி கேட்டால், அவர்களுடைய சுய மரியாதை உணர்ச்சிக்குப் பங்கம் ஏற்பட்டுவிடுமாம்.

எல்லாவற்றிலும் சிகரம் வைத்தது போன்ற நிலை வேறு ஒன்று உண்டு. தம்முடைய உறவினன் யாரேனும் அரசாங்க உதவியை நாடி யாசகம் கேட்க நேர்ந்தது என்பதைத் தமக்கு நேர்ந்த அவமானமாகவே கண்ணியமான யாரும் முதலில் நினைத்தனர். அவனுக்கு வேலை கிடைக்குமட்டும் தம்முடன் வைத்துக்கொண்டு, சமயம் நேர்ந்தபோது அவரைக் கைதூக்கி விடும் முயற்சியில் ஈடுபட்டு வந்தார்கள் பெரும்பாலோர், முதலில்.

அரசாங்கச் சட்டம் அமுலுக்கு வந்து, அதன் நெளிவு சுளுவுகள் எல்லோருக்கும் செவ்வையாக விளங்க நாலைந்து வருஷம் பிடித்தது.

இப்போது தம்முடைய உறவினருக்கு இவ்வித உதவி சம்பாதித்துக் கொடுக்கவே சிபாரிசு பிடித்துக் காரியத்தைச் சாதித்துக் கொள்வதில் அவர்கள் முனைகிறார்கள்!

உடைமையில் ஏற்பட்ட வறுமைக்கு மாற்று உண்டு. உள்ளத்தில் ஏற்படும் வறுமைக்கு மாற்று எங்காகிலும் உண்டா?

"லக்ஸ் டாய்லட் சோப்
என் சருமத்தை எழிலோங்க
வைத்துக்கொள்கிறது"

என்று கூறுகிருர் கண்ணம்பா




இனிய மணத்துடன் கூடிய இந்த
வெண்மையானதும் சுத்தமானதுமான சோப்
உங்கள் சருமத்தை வசீகரமாகச்செய்யும்!

சினிமா நட்சத்திரங்களின் அழகு தரும் சோப்

LTS. 338-X30 TM




2

சிவஸ்வாமி வாசித்து முடிந்ததும் அப்ளாஸ். பல்லவி அனுபல்லவி பாடி சரணத்தில் நிரவல் ஒரு ஆவர்த்தனம் விஜயா பாடினதும், "இன்னல் ஒட்டி இன்பம் ஊட்டி இந்திர ஜாலத்தைக் காட்டி" என்ற மழலைக் குரல் எழும்பவே, எல்லார் கண்களும் மேடையை நோக்கின. இந்த்ரஜால விந்தையாக, நிரவல் செய்து சுரமும் பாடி முடித்தாள் ஹேமமாலினி. மண்டபமே அதிரும்படி கர கோஷம் எழுந்தது. "என்ன ஆச்சர்யம்! சொல்லிக் கொடுத்தால்கூட நினைவில் நிற்க வேண்டாமா? ஜன்மாந்தர வாஸனுபலன்" என்று யாவரும் பேசிக் கொண்டார்கள். அந்தச் சமயம் ராஜாவின் பக்கத்தில் வந்து உட்கார்ந்து கொண்ட சாமி பாகவதர்,

"ஆஹா! விஜயா அதிருஷ்டசாலிதான். பெண்களுக்குப் பிடில் வாசிப்பதில்லை யென்று உறுதி கொண்ட, சங்கீத பூஷணம் சிவஸ்வாமி, அரங்கேற்றத்தில் பிடில் வாசிப்பது என்பது சாமான்ய விஷயமா?" என்றார்.

"எல்லாம் உங்கள் ஆசிர்வாதந்தான். இதை விட மிகப் பெரிய அதிருஷ்டம் வேறு காத்துக் கொண்டிருக்கிறது. விஜயமாலினி இனிமேல் விஜயமாலினி சிவஸ்வாமி" என்று சிரித்தவாறு கூறினான்.

"என்ன? விஜமாகவா? நம்பமாட்டேன். ஆயிரக் கணக்கில் மாத வருமானமுள்ள, பிரபல வக்கீல் நரசிம்மத்தின் பிள்ளை யெங்கே? சிவன் கோவில் பரிசாரகர் பரமேசுவர சர்மாவின் பெண் எங்கே? ஒருசமயம் விஜயாவின் அழகிலும் கலையிலும் சிவஸ்வாமி ஈடுபட்டுச் சொல்லலாம். நரசிம்மம் சம்மதிக்கமாட்டார்."

"இருவரும் மனித வர்க்கந்தானே? ஜாதிப் பிரிவினைகூட இல்லையே. சிவஸ்வாமியின் இஷ்ட விரோதமாக நரசிம்மம் நடக்கமாட்டார். முற்போக்காளரான நரசிம்மம் கலைக்கே பிராதான்யம் கொடுப்பார். நாளை உத்ஸவ முடிவானபடியினால் நாளைய மறுநாள் சிவஸ்வாமி போகவேண்டுமென்று சொல்லுவான். அதனால் பரமேசுவர அய்யரை, கச்சேரி முடிந்த பின்பு சுவாமி சன்னி

பூர்த்தி செய்விக்கும் கருவி ஹேமா வென்று தோன்றுகிறது. இவ்விஷயம் பற்றியும் அவரிடம் சொல்லி வையுங்கள்'' என்றான்.

கச்சேரி முடிந்ததும். விஜயாவிற்குப் பட்டுப் புடவையும் ஹேமாவிற்குப் பட்டுப் பாவாடையும் ஸ்ரீராமப் பிரசாதமாக ஓதியிட்டார்கள்., சிவஸ்வாமிக்குத் தேங்காய்மூடிப் பிரசாதமும், மற்றவர்களுக்குப் பணமும் ஓதியிட்டார்கள்.

''ஸ்ரீராமச்சந்திரன் சன்னிதியில் ராஜாவினிடம் வந்த ஈச்வர அய்யர், ''ராஜா! நான் கேள்விப்படுவது நிஜம்தானா? என் குழந்தை அவ்வளவு பாக்யம் செய்தவளா?'' என்று கையைப் பிடித்த வண்ணம் கேட்டார்.

"மாமா! உண்மையல்லாத விஷயத்தை உங்கள் போலுள்ளவர்களிடம் சொல்ல எங்கள் மனம் துணியுமா? நாளையே நரசிம்மத்தை வரவழைத்து விடுகிறேன். கல்யாணப் பொறுப்பு முழுவதும் என்னைச்சார்ந்தது. விஜயாவின் கவலை விட்டது. ஹேமாவின் விஷயமாகச் சாமி பாகவதர் சொல்லியிருப்பாரே? அது விஷயம் உங்கள் அபிப்பிராயம் என்ன?"

"எனக்கு என்ன சொல்வதென்றே புரியவில்லை. குழந்தையின் முன்னேற்றத்தைப் பற்றி நினைக்கும் பொழுது உன் யோசனைப்படி நடப்பது தேவலை என்று தோன்றுகிறது. ஒரே சமயத்தில் இரண்டு குழந்தைகளையும் பிரிவதென்றால்? மனம் கேட்கவில்லை''

''நீங்களும் எங்கள் கூட வந்து விடுங்கள். அவ்விடம் உங்கள் பொழுது போக்கிற்கு ஏதாவது ஏற்பாடு செய்து விடுகிறேன்.''

''புவனேசுவரர், அசலாம்பிகை, வாருணி நதி இவர்களை விட்டு நான் ஓர் இடமும் வரமாட்டேன். ராஜா! இவ்விதம் என் குழந்தையின் பொறுப்பை ஏற்றுக்கொள்ள வந்த உனக்கு என்ன கைம்மாறு செய்யப்போகிறேன். நானுகச் சொல்லும் சக்தியில்லை. உன்னிஷ்டப்படி யாவற்றையும் நடத்து. எனக்கு அதுவே பரம திருப்தி" என்று சொல்லிவிட்டு ஸ்ரீராமச்சந்திரமூர்த்தியின் பாதத்தடியில் சாஷ்டாங்கமாக நமஸ்காரம் செய்துவிட்டு, ''பிரபோ எல்லாம் உன் செயல்'' என்று கன்னத்தில் போட்டுக் கொண்டார்.

விஜயமாலினியின் சகோதரனாக நின்று, நரசிம்மத்தின் கௌரவத்திற்குப் பங்கமில்லாது வெகு விமரிசையாக அவ்வூரிலேயே விஜயா சிவஸ்வாமி திருமணத்தை நடத்தி வைத்தான் ராஜா. கல்யாணம் முடிந்ததும் கோடை விடுமுறையை நரசிம்மம் உள்பட யாவரும் அவ்வூரிலேயே கழித்தார்கள். விடுமுறை முடிந்ததும் ராஜா உள்பட யாவரும் ஒரே நேரத்தில் ஊருக்குக் கிளம்பினார்கள். புறப்படும் சமயம் ''அம்மா தாயில்லாமல் வளர்ந்த பெண். பெண்கள் பழக்கமே இல்லாத குழந்தை; ஒன்றுமறியாதவள், தவறி நடந்தாலும் தாய்போல் கண்டித்து, அரவணைத்து நடத்துங்



திக்கு அழைத்து வாருங்கள். விஷயத்தைப் பிரஸ்தாபித்து வைப்போம். பிறகு நரசிம்மத்தை வரவழைக்கலாம்.''

''சரி. பகவான் சித்தம் அப்படியென்றால் யார் தடை சொல்ல முடியும்?''

''பகவான் சித்தப்படிதான் இன்று கச்சேரி அமைந்திருக்கிறது. அது போகட்டும், சிறியவள் இவ்வளவு நன்றாகப் பாடுகிறாளே. உமது சிக்ஷை அபாரம்.''

''அவளுக்கு ஓர் அக்ஷரம்கூடச் சொல்லிக் கொடுத்ததில்லை. கேட்டுக் கொண்டிருந்தே இவ்விதம் பாடுகிறாள். பூர்வ ஜன்மத்தின் வாசனை பலன்.''

''அவள் இந்திரஜாலத்தைக் காட்டி'' என்று பாடும்பொழுது என் மனதிலும் ஓர்வித இந்திரஜாலமெழுந்தது. அவர்கள் குடும்ப நிலைமை பற்றி நேற்றே பட்டாச்சாரி சொன்னார். சிறியவளை என்னிடம் அனுப்புவாரானால் பரத நாட்டியம் சொல்லிக் கொடுக்கலாம். கலைத் தொண்டு செய்ய வேண்டுமென்ற எனது அபிலாஷையைப்

கள். அவள் செய்த பூஜாபலனே நீங்கள் கிடைத்தது. என் மனப்ராந்தி, அக்ஞானம் இப்படிச் சொல்லத் தோன்றுகிறது. வேறு நான் என்ன சொல்லப் போகிறேன்'' என்றார் சிவஸ்வாமியின் தாயாரிடம் பரமேசுவர அய்யர் கண் கலக்கத்துடன்.

''கவலைப் படாதேயுங்கள். விஜயா என் பெண். நீங்களும் வந்து விடுங்கள் என்றால், தீர்த்தம் மூர்த்தி இரண்டையும் பிரியமாட்டேனென்கிறீர்கள். அடிக்கடி வந்து பாருங்கள். ஆசைப்பட்டால் எப்பொழுது வேண்டுமானாலும் விஜயாவை நீங்கள் அழைத்து வரலாம். ஏன், புவனேசுவரரின் உத்ஸவ காலத்தில் நாங்கள் யாவருமே வருகிறோம்'' என்றாள்.

''ஏழை பணக்காரன், கௌரவ அகௌரவம், என்ற விஷயத்திற்கும் எனக்கும் வெகு தூரம். நீங்கள் நினைத்தபொழுது வரவும், பெண்ணைக் கூட்டி வரவும் ஆக்ஷேபனை கிடையாது. நாங்களும் உங்கள் இல்லத்தில் வந்து தங்கவும் செய்வோம். விஜயாவைப் பற்றிக் கவலைப்படாதேயுங்கள். நாம் பந்துக்கள், அது ஒன்று தான் என் லக்ஷ்யம்'' என்றார் நரசிம்மம் சம்பந்தியின் கைகளைப் பிடித்தவாறு,

தனியே நின்ற மகளிடம் சென்ற தந்தையினிடம் ''அப்பா! இவ்வளவு சீக்கிரம் உங்களைவிட்டுப் பிரிய வேண்டி வரும் என்று எதிர்பார்க்கவில்லை. கூடவும் வர மறுத்துவிட்டீர்கள். என்னால் உங்களுக்கு யாதொரு உதவியும் கிடையாதா? இதனால் தான் பெண் என்றால் ஒருபடி இறக்கமாகச் சொல்லுகிறார்கள் போலும்'' என்று விம்மலுக்கிடையிலேயே கூறினாள் விஜயா.

''விஜயா வருத்தப்படாதே. அசடாட்டமா பேசுகிறாயே. நீ செய்த பூஜா பலன் இவ்வளவு சீக்கிரத்தில் இந்தப் பாக்யம் கிடைத்தது. அதற்காக நீ சந்தோஷப்பட வேண்டும். பெண்ணென்று பிறந்தவர்களெல்லாம் ஒரு நாள் தகப்பனைப் பிரிந்து செல்ல வேண்டுவது இயற்கை தானே. ஜலம் விட்டுப் பாடுபட்டுக் கொடியை வளரும்படி செய்வது தோட்டக்காரனின் வேலை, கடமையுங்கூட. ஆனால், அக்கொடி கொழுகொம்பின் உதவியினால் படர்ந்து பூத்துக் குலுங்கி அதன் பயனை அடைகிறது. இனி நீ என்னை மறந்துவிட வேண்டும். உன் முழு அன்பையும் புருஷனிடம் செலுத்த வேண்டும், அது தான் ஸ்த்ரீ தர்மம். ஒற்றுமையுள்ள உன் தாம்பத்ய வாழ்க்கையைக் கேட்பதினால்தான் நீ என்னை மறக்காமலிருக்கிறாய் என்று நினைப்பேன். என் மனமும் சாந்தி பெறும். அவர்கள் மனம் கோணாது நட. ஹேமாவைப் பற்றிக்கூட நீ கவலைப்படக்கூடாது. பகவான் அவளையும் நல்ல பாதுகாப்பில் சேர்த்துவிட்டார். உன் கடமையை நீ தவறாமல் செய். அவ்வளவே நான் சொல்ல முடியும். கண்ணைத் துடைத்துக்கொள். அழுத முகத்துடன் அவர்கள் முன் வந்தால் நன்றாக இருக்காது'' என்று மகளைச் சமாதானம் செய்தார்.

''அப்பா!'' என்றாள் அவ்வளவே நாற்காலியில் உட்கார்ந்திருந்த தந்தையின் மடியில் முகத்தைப் புதைத்துக்கொண்டு விம்மினாள் ஹேமா. அக்காட்சி அங்கே கூடியிருந்தவர்களின் மனதைப் பச்சாத்தாபத்திற்குள்ளாக்கியது. குழந்தையின் முகத்தை நிமிர்த்தி கண்களைத் துடைத்துக் கொண்டே, ''ஹேமா! உனக்கு இஷ்டமில்லாவிடில் போகவேண்டாம்; நம்மூருக்குப் போய்விடுவோம்'' என்றார் தந்தை.

''என்னம்மா! குழந்தாய்! நேற்றெல்லாம், ராஜா மாமாவுடன் போகப் போகிறேன். அப்படியிருப்பேன், இப்படிப்பாடுவேன், அப்படி நாட்டியமாடுவேன் என்றெல்லாம் சொல்லிக்கொண்டிருந்தாய். புறப்படும் சமயம் அப்பாவைக் கட்டிக்கொண்டு அழுகிறாயே?'' என்ற சாமி பாகவதரின் சொல்லைக் கேட்டதும், சட்டெனக் கண்ணைத் துடைத்துக்கொண்டு தந்தையை விட்டு விலகி நின்று, ''போகத்தான் போகிறேன் சார். அப்பா தனியாக இருப்பாரே என்று நினைத்தேன். அது தான் அழுகை வந்தது. அப்பா, போயிட்டு வறேன். நீங்கள் அடிக்கடி வரணும். இன்னொரு தடவை இந்த ஊருக்கு வரும்பொழுது நன்றாக நாட்டியமாடுவேன்'' என்று அருகில் நின்ற ராஜாவின் கையைப் பிடித்துக்கொண்டாள்.

அவள் சொல்லிச் சென்றபடியே அடுத்த வருஷ உத்ஸவத்திற்கு வரும்பொழுது அவள் பரதநாட்டியம் ஆடத்தொடங்கிவிட்டாள். ஆனால் அதை அவ்வூரார் பார்க்க முடியவில்லை. குற்றம் குறையின்றிப் பூர்ணமாகக் கற்ற பின்பே வெளியரங்கில் தோன்ற வேண்டுமென்பது அவள் லக்ஷ்யம். அவன் காட்டிய பரிவிலும், தாய் முகம் காணாது, ஏனோ தானோவென்று வளர்ந்த குழந்தை ராஜாவின் தாய் அதிக அன்பை அள்ளிச் சொரிந்து ஹேமாவின் ஒவ்வொரு அற்ப விஷயத்திலும் கூடக் கவனம் செலுத்தி, ஆதரித்து வந்ததிலும், அச்சிறுமியின் மனதில் அவர்களிருவரிடத்தும் அளவற்ற அன்பும் பக்தியும் தோன்றலாயின. அதனால் ராஜா எது சொன்னாலும் தவறாமல் அப்படியே அதன்படியே நடப்பாள். அந்த வழக்கப்படி, அவ்வூரிலுள்ள எந்தப் பெரியவர்களானாலுமே 'எங்கே கொஞ்சம் ஆடிக்காட்டுப் பார்க்கலாம்' என்று கேட்டால் 'நான் இன்னும் முழுவதும் கற்கவில்லை. குறை வித்தையைக் காண்பிப்பது தவறு,' என்று கண்டிப்பாக மறுத்துவிடுவாள். அவள் சென்ற மூன்றாவது வருஷம் அவ்வூரில் ஸ்ரீ ராமச்சந்திரர் சன்னிதியில் அரங்கேற்றமும், ராஜாவின் கல்யாணமும் ஒன்றாக நடந்தன. கல்யாணத்திற்கு வந்திருந்த சிவஸ்வாமி ''என்னடா, உன் லக்ஷ்யம் என்ன இப்படியாயிற்று? காதலித்துப் பின் மணக்கவேண்டும்; பணம் வேண்டாம், குணம் வேண்டும், ஏழைப் பெண்ணாகப் பார்த்து, அவள் குணமறிந்து பிறகு தான் மணப்பேன் என்றாயே; கர்வங்கொண்ட பெரிய பண்ணையார் மகளையல்லவா மணந்திருக்கிறாய்? அந்தப் பெண் உன் லக்ஷ்யத்திற்கு ஒத்து வருபவளாகத் தோன்றவில்லையே. அன்று நலுங்

இடும்பொழுது, உன்னுடன் சேர்ந்து வீணை வாசிக்கவேண்டுமென்று எல்லோரும் சொல்லும் பொழுது, மரியாதை மதிப்பு கொஞ்சமுமில்லாது முடியாது என்று சொல்லிவிட்டாளே. இன்று உன் மோவாய்க்கட்டையைப் பார்க்கும்பொழுது, நேற்று உனது முதல் இரவுகூடச் சுகமாகக் கழிந்திருக்குமோ என்று சந்தேகிக்க இடமளிக்கிறது. உண்மை என்னடா? சொல்லு.”

“சொல்ல என்ன இருக்கிறது? உனது முதலிரவைப்பற்றிச் சொன்னாயல்லவா? அதை நினைத்து நான் சந்தோஷப்பட வேண்டியதுதான்.” என்றான் நீண்ட மூச்சுடன்.

“ஏனிப்படிச் செய்தாய்? மனமுவந்துதானே ஏற்றுக்கொண்டாய்?

“ஒருவிதத்தில் பார்க்கப்போனால் மனமுவந்துதான் ஏற்றுக்கொண்டதாகும். உண்மையான காரணம் அம்மாவிற்காகத்தான்”.

“உன் இஷ்ட விரோதமாக உன் தாயார் கட்டாயப் படுத்தினாள் என்றால் அது விஷயம் நம்புவது சற்றுச் சிரமமே”

“கட்டாயப் படுத்தவில்லை. கடமையில் கட்டுப் படுத்திவிட்டாள். மாமனார் ஜாதகம் பொருத்தமிருக்கிறது என்று வந்ததுமே, நான் அம்மாவினிடம், அப்பெண்ணின் குண விசேஷம் அவ்வளவு போற்றத் தகுந்ததில்லையே, என் மனதிற்கு அவ்வளவாகச் சம்மதமில்லை, தட்டிக் கழித்துவிடு” என்றேன்.

“அப்படியானால் நீ வேறு யாரையாவது மனதில் வைத்துக்கொண்டிருக்கிறாயா? சிவஸ்வாமியைப்போல், மணக்கலாமென்று நினைக்கிறாய் என்பதற்கும் ஹேமா மணப் பருவமடையக் குறைந்தது ஐந்து வருஷமாகும். என்ன காரணம் சொல்லித் தட்டிக்கழிக்கமுடியும். வேறு பெண்ணைக் குறிப்பிட்டாயானால் காரணம் சொல்லிவிடலாமே தவிர, ஏனோதானோவென்று சொல்லக் கூடிய மனிதரல்ல அவர்?. . அன்று உன் தந்தை நிறையச் சொத்தையும் வைத்தார் என்றாலும், பள்ளியார் மங்கலம் கிராமத்தில் ஐம்பதினாயிரத்தைப் போட்டிருந்தார், அவ்வூர் ஆட்களோ அதிலிருந்து ஒரு மணி நெல் எடுக்க முடியாமல் அக்ரமம் செய்துவந்தார்கள். ஒரு வயதுக் குழந்தையான உன்னை வைத்துக்கொண்டு இருபது வயதுகூட நிரம்பாத நான் என்ன செய்யமுடியும்? அந்தச் சமயம் அவர் முன் வந்து தம் உயிரைக்கூட மதியாமல் ஐம்பதினாயிரத்தையும் லக்ஷமாக வசூலித்துக் கொடுத்தது மன்றி இன்றுவரை நமது விஷயத்தில் எவ்வளவு பாடுபடுகிறார்? அவரும் ஒரு லக்ஷாதிபதியே; அவர் முகத்தை எப்படி முறித்துப் பேசுவது?” என்றான்.

“என் நிலைமை சங்கடமாகிவிட்டது. என் அந்தரங்க எண்ணம் ஹேமா கலையுலகில் வெற்றி காணும்வரை பிரும்மசாரியாகவே இருந்துவிட்டு, பிறகு அவள் பிரியப்பட்டால் அவளையே மணந்து கொண்டால் என்ன? பத்து வயதுதானே வித்யாசம் என்ற நினைப்பு சிலசமயம் தோன்றுவதுண்டு. அதற்குச் சரியான விடை அம்மா வாயிலிருந்து வரவே, ‘நான் ஒரு பெண்ணையும் பார்க்கவில்லை. வரிக்கவுமில்லை. இப்பொழுதைக்குக் கல்யாணம் வேண்டாமே என்பதுதான். என்றாலும் இந்தப் பெண் உன்னை மரியாதையாக நடத்தவேண்டும். ஹேமாவினிடம் அன்புகாட்டவேண்டும். அதனால்தான்......’

“மரியாதை கொடுத்து மரியாதையை வாங்கிக் கொள்வேன். அதற்கும் மிஞ்சினால் என்பாட்டில் கிராமத்தில் ஹேமாவுடன் சுகவாசம் செய்வேன். மாதம் ஒருமுறை உன்னைப் பார்த்தால் போதும். ஹேமாவை நீ எந்தக் காட்டில் எந்த ராக்ஷசர்கள் மத்தியில் கொண்டுவிட்டாலும், அவளுடைய பணிவான குணத்தினால் அவர்களையும் அடிமைகொண்டுவிடுவாள். அதனால் நீ கவலைப்



படாமல் இந்தக் கல்யாணத்தை ஒத்துக்கொள்," என்றாள்.

"எனது நலம் ஒன்றே தனது ஜீவிய லக்ஷ்யமாகக் கொண்ட தாயாரின் விருப்பத்தை மறுக்கும் சக்தி என்னிடமிருந்து அகன்றுவிட்டது. அந்த விதம் மணந்துகொண்டாலும் மனைவி என்ற பாசத்துடன் நடக்கவே என் மனம் விரும்பினது. ஆனால் அதைக் கத்தரித்துவிடுவாள் போலிருக்கிறது."

"எப்படி?"

"கவலையில்லாமல் சந்தோஷமாகப் பேசிக்கொண்டிருக்கவேண்டிய சந்தர்ப்பத்தில், அவள் அப்பா நிலத்திற்குப் பக்கத்திலிருக்கும் எனது நிலத்திற்கு அவருடைய முயற்சியினால்தான் தண்ணீர் பாய்கிறதாம், அதை அவருக்கே கொடுத்துவிட்டு, மற்றொரு பகுதியிலிருக்கும் நிலத்தை நான் எடுத்துக்கொள்ளவேண்டுமாம். ஹேமாவை நான் வைத்து வளர்ப்பது தவறான செயலாம். இது மாதிரியான பேச்சுக்களே பேசினாள். என் மனம் எப்படி இருக்கும்?"

"நில விஷயமெல்லாம் உன் அப்பாவும் என் அம்மாவும் பேசித் தீர்த்துக்கொள்வார்கள், அதைப்பற்றிக் கவலை எடுத்துக்கொள்ள இது சமயமல்ல. ஹேமா விஷயம் நம்மிருவர் இஷ்டத்திற்கும் உட்பட்டதல்ல. என் தாயார் எது செய்தாளோ அதுதான் சரியான விஷயம் என்பதுதான் எனது பால்யப் பருவத்திலிருந்தே தெரிந்துகொண்ட அனுபவம், அம்மா தனது குழந்தையெனவே வளர்த்து வருகிறாளென்பது யாவருமறிந்த விஷயம்தானே, நீயும் தெரிந்துதானே கல்யாணம் செய்துகொண்டாய். கலையுலகில் என்னுடன் ஒத்துழைத்து, தமாஷாகக் கவலையின்றி உண்டு உறங்குவதே உன் வேலை. மற்ற அனாவசியமான விஷயங்களைப்பற்றி விவாதம் செய்து வம்பு வளர்க்காதே?"



"நான் படிக்காத முட்டாளல்ல. S.S.L.C. தேறியவள். காலேஜுக்குப் போகவேண்டியவள், அப்பா அம்மா பிடிவாதத்தினுலும், இவ்விடம் என் இஷ்டம்போல் நடக்க யாதொரு தடையுமிருக்காது என்றுதான் கல்யாணத்திற்கே ஒத்துக்கொண்டேன். வீட்டில் எந்த விஷயங்களையும் கேட்க எனக்கு உரிமையுண்டு" என்று தர்க்கம் செய்யத் தொடங்கிவிட்டாள்—நான் எவ்வளவோ நயமாகப் பதில் சொல்லிவந்தேன். கடைசியில் என் பொறுமைக்கும் எல்லைகாணும் என்ற நிலைமை ஏற்படவே பளீரெனக் கன்னத்திலறைந்துவிட்டு வெளியில் வந்துவிடலாமாவெனத் தோன்றிற்று. பிறகு ரசாபாசமாகவல்லவா ஆகிவிடும். அதனுல் பேசாமல் எழுந்து படுத்துக்கொண்டுவிட்டேன். சற்றுநேரத்திற்கெல்லாம் விசும்பல் சப்தம் கேட்டது. என் மனம் மிக்க சங்கடப்பட்டது. இப்படியே வெளியே சென்று ஏதாவது உளறிற்ருனல், முக்கியமாக விஜயா பார்த்தால் மிகவும் ரசாபாசமாகிவிடும் என்று எழுந்துபோய் "எதற்காக அழுகிருய்? சந்தோஷமாகக் கழிக்க வேண்டிய இரவை வீண் விவாதத்தில் கழிக்கும்படி செய்தால் எனக்குக் கோபம் வராதா?" என்று சமாதானம் செய்து அழைத்துவருவதற்குள் போதும் போதுமென்ருகிவிட்டது. ஒரு வாருகப் பிறகு அமைதியாகவே இருந்துவிட்டேன்."

"நிலைமையை சீர்தூக்கிப் பார்த்தால் ஹேமாவினுல் உங்கள் தாம்பத்தியத்தில் சிக்கல் ஏற்படும் போல் தோன்றுகிறது. அதனுல் ஹேமாவை நான் அழைத்துச் சென்றுவிடுகிறேன். கல்யாணம் ஆனவுடனேயே என் தகப்பனுர் ஹேமாவை என்னை அழைத்து வைத்துக்கொள்ளும்படி சொன்னுர். ஏகபுத்திரனுகிய ராஜா, கலைப் பித்துப் பிடித்த ராஜா ஆர்வத்துடன் அழைத்துச் செல்கையில் நான் கூப்பிடுவது சரியல்லவென்று சொன்னேன்"

"ஹேமாவை நீ அழைத்துச் சென்ருல்மட்டும் சரியாகப்போய்விடுமென்று நினைக்கிருயா? இந்தக் குணமுள்ளவர்கள் ஒருவரிடமிருந்து இன்னொருவரிடம் தாவுவார்கள். ஹேமா இல்லையென்ருல் அம்மா அகப்படுவாள். அம்மாவையும் அனுப்புவதா? மேலும், நான் சம்மதித்தாலும் அம்மா ஹேமாவைப் பிரியச் சம்மதிக்கமாட்டாள். அம்மாவிற்கு எவ்வளவு உதவியாக இருக்கிருள்? பள்ளிக்கூடத்திலோ எல்லா உபாத்திமார்களும் இவளிடம் தனி அன்பு காட்டுகிருர்கள். எந்த விஷயத்திலும் முதல் பரிசு வாங்கிவிடுகிருள். நாட்டியமும் சங்கீதமும் அவளிடம் கெஞ்சுகின்றன. இவ்வளவு சீக்கிரம் இவ்வளவு நன்ருக ஆடப் பழகியவர்களை இதுவரை பார்க்கவில்லையென்று நட்டுவனுர் ஆச்சரியப்படுகிருர். தாய் முகங் காணுது வளர்ந்த குழந்தைக்குப் பகவான் அசாத்ய அறிவைக் கொடுத்திருக்கிருர். அவளால்தான் நான் வாழ்க்கையில் சற்ருவது நிம்மதிகாணமுடியும். நீ வீண் யோசனை செய்யாதே. வாழ்க்கையில் ஒருவர் தணிந்துபோய்விட்டால் விவகாரத்திற்கு இடமேது? சில தாம்பத்யம், கணவனது ஒருமாதிரியான குணத்திற்காகத் தனது சுயநட்பை விட்டுக்கொடுத்து நடப்பதில்லையா? அதுபோல் மனைவி விஷயத்தில் கணவன் நடப்பதும் நியாயம்தானே? நான் தணிந்துபோவேன். பிரேமாவிற்கு ஹேமா மீது வெறுப்பு ஏற்படா வண்ணம் நடந்து வருவேன், நண்பா! கவலைப் படாதே. இவ்விஷயமொன்றையும் விஜயாவின் காதில் போடாதே. என் லக்ஷ்யம் நிறைவேற வேண்டும், அவ்வளவே."

"லக்ஷ்யம் லக்ஷ்யம் என்கிருயே, அந்த லக்ஷ்யம் என்ன?"

'ஸௌந்தர்யம், அறிவு, கலாபிமானம் இவை யாவும் ஒன்று அமைவது துர்லபம். அப்படி அமைந்துவிட்டாலும், அதன் பலனை அனுபவிக்க முடியாமல் செய்துவிடும் சூழ்நிலை. ஹேமாவை முதலில் பார்த்த பொழுதே முதலில் சொன்ன மூன்றும் அமைந்தவள் எனத் தெரிந்துவிட்டது. சூழ்நிலை சரியில்லை. அந்தச் சூழ்நிலையை நான் ஏற்படுத்திவிட்டால், மலைமீது ஏற்றிய தீபம்போல் அவள் வாழ்வில் பிரகாசமடைவாள். ஆடல் பாடல்களைக் கற்பித்து, அறிஞர், 'அவளுக்கு நிகர் அவளே' என்னும் நிலைமை ஏற்பட வேண்டும். பாரத நாடு முழுவதற்கும் இவளே நடன ராணியாக வேண்டும். உலகம் போற்றும் கலா ஜோதியான ஸ்ரீ நாத சர்மாவின் புகழுரையும் பரிசும், நானும் ஹேமாவும் பெற வேண்டும். அந்த விஷயத்திற்காகவே வக்கீல் தொழிலுக்குப் படிக்கச் சேர்ந்தேன்.

"ஸ்ரீ நாத சர்மா பரிசு அவர் திட்டப்படி ஆடுபவர்களுக்குத் தானே; உனக்கு எப்படிப் பரிசு?"

"உனக்கு விஷயம் முழுவதும் தெரியாதா? வித்தைக்கு மூல காரண கர்த்தாவிற்கும் புகழும் பரிசும் கொடுக்கிருர். ஒருவரும் தாமாக அவரிடம் செல்ல முடியாது. கலையில் முன்னேறுகிறவர்களைத் தம் இருப்பிடத்திலிருந்தே அறிந்துகொண்டு விடுகிருர். அவருடைய சிஷ்யர்கள், தாங்கள், பார்த்து மனம் திருப்தியுற்றபின் அவருக்குத் தெரிவிப்பார்கள். அதன் பின் அந்த ஆசாமிக்கு அவரிடமிருந்து அழைப்பு வரும். கங்கா தீரத்தில் சபை கூட்டி, கலையைப் பரிசோதித்துப் பரிசு அளிப்பார். சிஷ்ய கோஷ்டி ஊர் ஊராகச் சுற்றி, தாங்களாகவே விசாரித்து அறிந்து, இன்னுரெனச் சொல்லாமல் கலையைப் பார்த்து அறிந்து கொள்ளுகிருர்கள். உன்னைப் போல் மேடையேறிக் கச்சேரி செய்கிறவர்களானுலுமே என்னைப் போல் ஆத்மானுபவமாகக் கலை உபாசனைசெய்தாலுமே கலையின் மதிப்பை அவர் அளந்து விடுகிருர்."

"அப்படியானுல் எனக்கும் விஜயாவிற்கும் கூடக் கிடைக்கலாமென்று சொல்லு."

"நிச்சயமாகக் கிடைக்கும். எனது லக்ஷ்யம் நான் சொன்ன பரிசன்று. ஐந்து வருஷத்திற்கு

ஒரு தடவை கலைவிழா ஒன்று நடத்துகிறார். அதில் நடனத்திற்கு முதல் ஸ்தானம். அவரே ஜட்ஜாக இருந்து தீர்ப்புக் கூறுகிறார். முற்காலத்தில் ஒரு மஹாராஜா ஏற்படுத்திய வைரப் பதக்கப் பரிசு என்ற வழக்கத்தை வைத்துக் கொண்டிருக்கிறார். அப்பரிசு வாங்கியவர்கள் இந்தியாவிலேயே, நடனத்தில் தலை சிறந்தவராவர். இது வரை தமிழன் ஒருவனுமே அப்பதக்கத்தைப் பெறவில்லை. ஹேமாவிற்கு அது கிடைக்குமென்று நிச்சயமாக நம்புகிறேன். சென்ற வருஷம் தான் போட்டி நடந்தது. இன்னும் நான்கு வருஷத்தில் ஹேமா நல்ல தேர்ச்சி பெற்று விடுவாள். பருவமடைந்து எழிலரசியாக விளங்குவாள். இவைகளை உத்தேசித்தே இப்பொழுது கல்யாணம் வேண்டாம். பிற்காலம் அவள் கலை, என் லக்ஷ்யம் எல்லாம் முன்னேற நானே மணந்து கொண்டு விடுவது என்று. ஏக



புத்ர விஷயமாதலால் அது விஷயத்தில் சொந்த உரிமையை விட்டுக் கொடுக்க வேண்டி வந்து விட்டது. பிற்காலத்தில் 'கலையை ஆதரிப்பவனா' என்பதை என்னிடம் வைத்துப் பார்த்துப் பிறகு தான் ஹேமாவிற்குக் கல்யாணம் செய்து வைப்பேன். எனது லக்ஷ்யத்தை உத்தேசித்துப் பிரேமாவின் எந்த அவமதிப்பையும் சஹித்துக் கொண்டு, ஒற்றுமையுள்ள தாம்பத்ய வாழ்க்கையே நடத்துவேன்."

"எது எப்படியானாலும் உன் தாம்பத்யம் சுகமுள்ளதாக வேண்டுமென்பதே எனது லக்ஷ்யம். நீ கூறும் உறுதி மொழியில் அது நிச்சயம் எனத் தோன்றுகிறது. அதுபற்றிச் சந்தோஷம். நீ சொல்லிய நடன விழா இருமுறை தானே நடந்திருக்கிறது. தமிழன் முயற்சியெடுக்குமளவு பிரபலம் அடையவில்லை. இனி எல்லோரும் முயற்சியெடுப்பார்கள். நீயும் பரிசு பெறுவாய். ஆனால் ஒரு விஷயம் மட்டும் நான் நினைப்பூட்டுகிறேன். ஹேமவை நீ மணம் செய்துகொண்டு கலாபிவிர்த்தி செய்வது என்பது மனச்சந்துஷ்டியுடன் முடியாது. 'மனைவி' என்ற பந்தம் ஏற்பட்டு விட்டால் அன்னியன் பார்வையையே மனம் சஹிக்காது. அங்க அசைவுகளுடன் பிறர் முன் ஆடும்பொழுது உன் மனம் அலை பாயும். கலை கலை என்று அணை போட்டாலும் குமுறி எழும்பும் நிம்மதியற்ற வாழ்க்கையைத் தான் காண முடியும்.

உனது கலையார்வம் பூர்த்தியடையவே பகவான் இந்தக் கல்யாணத்தை நடத்தி வைத்தார் என்று சந்தோஷப்படு. பகவானுக்கு நன்றி செலுத்து."

"நீ நினைப்பது தவறு. கலையுள்ளத்தில் பொறாமையே தோன்றாது. பிரத்யக்ஷ அநுபவமாக உனது தாம்பத்யம் சந்தோஷத்தில் கழிவதைக் கண்டு வருகிறோமே?"

என் விஷயம் வேறு. இருவருமே மேடைமீது உட்கார்ந்து விடுகிறோம். அதிலும் ஒரு சிறு அனுபவத்தைக் கொண்டே சொல்லுகிறேன். ஒரு சமயம் கச்சேரி ஏற்பாடானபின் எனக்குத் திடீரென உடம்பு அசௌக்யம் ஏற்பட்டு விட்டது. மறுக்க முடியாத சந்தர்ப்பமானபடியினால் நமது, ராமச்சந்திரன் வாசித்தான். அதுபற்றி மனதில் ஒன்றுமே தோன்றவில்லை. பிறகும் இரண்டு தடவை அதுமாதிரி நடந்தது. அப்பொழுது ஒரு மாதிரியாக இருந்தது. கடைசி தடவையாக, காலேஜில் பரீக்ஷை சமயம். முதலாவதாக எனக்கு மேல் பார்வை வேலை கொடுத்த சமயம். முக்யமான சபா ஒன்றில் கச்சேரி ஏற்பாடு செய்ய வந்தார்கள். எனக்குள்ள அசௌகரியத்தைச் சொல்லிப் பிற்பாடு வருகிறேன் என்று சொன்னதற்கு, விஜயாவை மட்டும் ஒத்துக்கொள்ளச் சொல்லுங்கள் என்றார்கள். "என்ன விஜயா?" என்று கேட்டதற்கு ஆகட்டுமென்று சொல்லி விட்டாள். அப்பொழுது என் மனம் சொல்லொணாத வேதனையடைந்தது. இனிமேல் நம்முடைய உதவியின்றியே கச்சேரிக்குக் கிளம்பி

விடுவளோ என்றுகூடத் தோன்றியது. கலை விஷயத்தில் பேதம் நினைப்பது மதியீனம் என்று மனச்சாக்ஷி வேறு எடுத்துக்கூறிற்று. விஷயத்தை வாய்விட்டுக் கேட்காமல் எப்பொழுதும் போலவே நடந்து வருவதாக எண்ணிக் கொண்டிருந்தேன்; அதியூகசாலியான விஜயா அறிந்துகொண்டு விட்டாள். மற்றொரு சந்தர்ப்பம் ஏற்பட்டபொழுது, கண்டிப்பாக நானில்லாது வரமுடியாது என்று மறுத்து விட்டாள். நான் காரணம் கேட்ட பொழுது, நீங்களில்லாமல் போனால் பாடவே மனம் கூசுகிறது. நிம்மதியில்லாமலிருக்கிறது, என்று கூறிவிட்டாள். பிறகு மிகமிக வற்புறுத்திக் கேட்ட பின்பு, கச்சேரி பண்ணிவிட்டு வந்து பார்க்கும் பொழுது என் முகம் மாறியிருப்பதைக் கண்டுகொண்டு, எனக்கும் நீங்களில்லாது இன்னொருவர் பக்கத்தில் உட்கார்ந்து பாட மனதிற்கு உற்சாகமில்லாமல் போய்விடுகிறது. உங்களுக்கும் மனதில் சஞ்சலம் ஏற்படுகிறது, என்று தெரிந்துகொண்டு இக்காரியத்தில் இறங்குவானேன் என்றாள். இது விஷயமே இப்படியென்றால் பருவகாலத்தில் சபையின் மத்தியில் அங்க அசைவுகளுடன், "வந்து கந்தனை என்னைக் கலந்தணைந்து போகச் சொல்லடி" என்று அபிநயம் பிடிக்கும் பொழுது கணவன் என்ற உரிமையில் கலையை அனுபவிக்க முடியாது. கருத்தைத்தான் அனுபவிக்க முடியும். அதனால் அவள் மிக விரும்பினாலன்றி, கல்யாணம் செய்யாதே. கலைக்கே வாழ்வை அர்ப்பணம் செய்யட்டும்" என்றான்.

"என் வாழ்க்கையே மாறிவிட்டதே. அதனால் உனக்குக் கவலை வேண்டாம். ஆனாலும் என் மனம் கலையைத்தான் நாடும், கருத்தை நாடாது. லக்ஷ்ய புருஷன் லக்ஷ்யத்தைக் கை நழுவ விடுவானா?"

"எல்லாவித லக்ஷ்யமும் உணர்ச்சிக்கு அப்பாற்பட்டவை யென்பதுதான் எனது அனுபவம்; என்றாலும் உன் லக்ஷ்யம் கைகூடப் பகவானை வேண்டுகிறேன்."

3

"பெண்ணென்று பூமிதன்னில் பிறந்துவிட்டால் பெரியவினை இருக்குதடீ" என்று ரேடியோவிலிருந்து எழுந்த கீதமானது, கட்டிலில் படுத்திருந்த பிரேமாவின் மன நிலையைச் சித்திரிப்பது போலிருந்தது அவளுக்கு. அந்தி மயங்கி வெளிச்சம் குறைந்து இருள் பரவும் அந்த அறையானது அவளது வாழ்க்கை ஜோதியை, வியாதியிருள் பரவி, மங்கவைக்கும் காட்சியைப் பிரதிபலிப்பது போல் தோன்றினது. 'அம்மா! எவ்வளவு நாள் இந்த நரக வேதனையோ" என்று முணு முணுத்தவாறு புரண்டு படுத்தாள்.

"மாமி! ஒருவருமே இவ்விடம் வரவில்லையா. விளக்குக்கூடப் போடவில்லையே" என்று கேட்டவாறு ஸ்விச்சைத் தட்டிவிட்டாள் ஹேமா.

"நீ ஒருத்திதான் அலுக்காமல் படியேறி இறங்குவாய். அவர்கள் வயதானவர்களல்லவா? மேலும் வேலை அதிகமிருக்கும். அதனாலென்ன? தையற்காரன் பாவாடையைக் கொடுத்தானா!" என்றாள் பிரேமா.

"அதைக் கையுடன் வாங்கி வந்துவிட வேண்டுமென்று நின்றதனால்தான் இவ்வளவு நாழியாகிவிட்டது." என்று சொல்லியபடி மருந்து கிளாசை அவள்முன் நீட்டினாள். "ஈசுவரா எவ்வளவு நாள் இந்த மருந்து சாப்பிட வேண்டுமோ?" என்று அலுத்துக் கூறியவண்ணம் மருந்தை வாங்கி வாயில் விட்டுக் கொண்டாள்.

"தங்களுக்கு இப்பொழுது என்ன ஆகாரம் கொண்டுவரட்டும். கீழே கொஞ்சம் வேலையிருக்கு என்று அம்மா சொன்னார். அதை முடித்துவிட்டு அரைமணியில் வருகிறேன். இன்னும் இரண்டு நாள் உங்களைத் தனியே விட்டுவிட்டுப் போக வேண்டியிருக்கிறது. நாளன்று பிரதிபாவின் பிறந்தநாள் கழிந்துவிட்டால் உங்கள் உடம்பும் கொஞ்சம் தேறிவிடும், எனக்கும் வேலையிருக்காது".

"பிறந்த நாள் கழிந்தால் எனக்கு உடம்பு குணமாகுமென்று யார் சொன்னது?"

"அம்மா அன்று ஒருவரிடம் ஆருடம் கேட்டார் அவர் சொன்னார்."

"வீண் பிரமை. அதுபோகட்டும் சற்றுப் பொறுத்து மிளகு ரசம் வைத்துக் கரைத்துக் கொண்டுவா" என்றாள்.

"உங்களுக்கு இப்பொழுது ஒன்றுமே வேண்டாமா?"

"ஒன்றும் வேண்டாம் நீ போய்வா."

"தலையணையை அடுக்குகிறேன் சற்றுச் சாய்ந்து உட்கார்ந்து கொள்ளுகிறீர்களா?"

"சரி" ஹேமா சென்றதும், தலையணையில் சாய்ந்து உட்கார்ந்தவளின் பார்வை சுவரில் மாட்டியிருக்கும் படங்களின் மீது சென்றது. கல்யாண கோலத்துடன் அவளும் அவள் கணவனும் ஒருபடம். அதையடுத்து ஹேமாவின் பத்து வயதுச் சிறுமியின் நடனத் தோற்றம். அதையடுத்து ஹேமாவின் ஒவ்வொரு அங்கத்திலும் யௌவனத்தின் மிடுக்கும் சோபையும் பொங்கியெழ, ராஜாவும் அவளும் பக்கம் பக்கமாக நின்று ஸ்ரீநாத சர்மா, சர்மாவின் பரிசும் ஆசியும் பெறும் படம். பார்வை அந்தப் படத்தின் மீதே நின்றுவிட்டது. அந்த நிகழ்ச்சியின்போது ஏற்பட்ட சம்பவங்கள் மனத்திரையில் படமாக ஓட ஆரம்பித்தது.

ஹேமாவைத் தனக்குச் சமதையான அந்தஸ்தில் வளர்த்து வருவதால் அவளுக்கு ஹேமாவின் மீது அளவற்ற வெறுப்புத் தோன்றலாயிற்று.

நடையுடை பாவனையாலும், ராஜா ஹேமாவின் மீது பிரேமாவிற்கு இருக்கும் அபிப்பிராயத்தைச் சொன்னதினாலும், எந்த ஒரு விஷயத்திற்கும் பிரேமாவின் உதவியின்றித் தானே ஹேமாவைக் கவனித்து வந்தாள் ராஜாவின் தாய். சிறுமியான ஹேமாவும் பிரேமாவின் உதாசீனத்தைப் புரிந்து கொண்டவள் போல் அவளிடம் பயத்துடனேயே நடந்து வந்தாள். ராஜாவின் தாயும் ஹேமாவை எச்சரித்து வைத்திருந்தாள். இருந்தாலும் ஹேமா பிரேமாவின் எந்த விதமான ஏவல்களையும் பணிவாகச் செய்து வந்தாள். சிலசமயம் ராஜாவின் தாயார் மீனாக்ஷிக்குத் தெரியாமலேயே ஏவல் புரிவாள், தன் சொல் மீனாக்ஷியினிடத்திலோ, ராஜாவினிடத்திலோ செல்லாது என்ற உண்மை தெரிந்துவிட்டதால் அந்த ஆங்காரத்தைப் பேதை ஹேமாவின் மீது வைத்துத் தாக்குவாள். "பொறுமை புவனத்தையும் அடிமை கொள்ளும்" என்ற வாக்யப்படி நாளடைவில் ஹேமாவின் பொறுமைக் குணம் பிரேமாவின் மனதைத் தொடாமலிருக்க முடியவில்லை. நமக்கு உதவிக்கு இதுமாதிரி ஆள் தேவையாக இருக்கிறது. இருந்துவிட்டுப் போகட்டும் என்ற மனப்பான்மையில் ஹேமாவை ஆதரத்துடன் நடத்தலானாள். காலம் ஒரே நிலையில் ஓட முடியுமா? ஹேமா யௌவனப் பருவத்தை எட்டிப் பார்க்கும் பொழுதே எழில் மிகுந்த மங்கையாகத் தோற்றமளித்தாள். நாட்டியம் பழகி வந்த அவளது ஒவ்வொரு அங்கமும் உருண்டு திரண்டு, தந்தப் பாவை போல் இருந்தாள். கண் வலிக்காரனுக்கு விளக்கொளியைப் பார்ப்பது போலிருந்தது ஹேமாவின் அழகுப் பிம்பம் பிரேமாவிற்கு.

ராஜாவிற்கோ தனது லக்ஷ்யம் கைகூடும் சமயம் வந்துவிட்டது என்று ஆனந்தம் மிகைப்பட்டது. என்றாலும் பிரேமாவினிடம் எச்சரிக்கையாகவே நடந்து வந்தான். அவள் எது சொன்னாலும் கேட்டு நடப்பான்; தனது இஷ்டம் என்பதைத் தியாகம் செய்து விட்டான் என்றே சொல்லவேண்டும்.

பிரேமா ரொம்ப நன்றாக வீணை வாசிப்பாள். அது விஷயத்தில் ராஜாவிற்கு மிகப்பெருமை. இருவரும் சேர்ந்து வீணை வாசிக்கவேண்டுமென்பது ராஜாவின் விருப்பம். அதுகூட அவன் இஷ்டப்பட்ட சமயம் நடக்காது. அவள் மனமிருந்தால்தான் நடக்கும். அவன் அழைக்கும் சமயம் இப்பொழுது எனக்கு வாசிக்கும் மூடு இல்லையென்று பதில் கூறிவிடுவாள். அவளாக வந்து வாசிக்கவேண்டுமென்று கேட்கும்பொழுது, அவனுக்கு எவ்வளவு வேலையிருந்தாலும், மூடு இல்லாவிட்டாலும் வாசிக்க உட்கார்ந்து விடுவாள். இல்லையென்றால் ஹேமாவின் பெயரால் வம்பு வளர்த்துவிடுவாள் என்ற பயம். ஒரு சமயம் ராஜா சேர்ந்திருந்த தமிழ்ச் சங்கத்தின் ஆண்டு விழா நடந்தது. அதில் ராஜாவைப் பிரேமாவுடன் சேர்ந்து வீணை வாசிக்கும்படி கேட்டார்கள். ராஜாவிற்கும் அதில் மிகுந்த விருப்பம். பிரேமாவிடம் கேட்டபொழுது "நான் கோவில் பரிசாரகன் பெண்ணல்ல சபை நடுவே கச்சேரி செய்ய" என்று வெடுக்கெனப் பதிலளித்தாள்.

"உனக்கு விருப்பமில்லையெனச் சொன்னால் போதாதா? சன்னச் சொல் எதற்காக? சப்தஸ்வரங்களானவை பண்ணையார் பெண்ணிற்கென்றும் பரிசாரகன் பெண்ணிற்கென்றும் தனித்தனியாக ஒலிப்பதில்லையே" என்றதுடன் நிறுத்திக் கொண்டான்.

பிறகு ஒரு சமயம் ராமநவமி உத்ஸவத்தில் அவர்கள் ஊரில் தானும் ராஜாவும் சேர்ந்துவீணை வாசிக்க வேண்டுமென்றாள். அப்பொழுதும் சரியென ஒத்துக்கொண்டானேயன்றி, அந்தச் சபையில் வாசிக்க மாட்டேனென்றாயே, நீ சொன்ன பொழுது இந்தச் சபையில் மட்டும் வாசிக்கலாமா? என்றுகூடக் கேட்கவில்லை, அந்த லக்ஷ்ய புருஷன். இதேபோலத்தான் தாம்பத்ய ஒற்றுமை குறையாமல் எல்லா விஷயங்களையும் நடத்திவந்தான்.

இவ்விதம் நடந்துவந்தும் அவன் பொறுமையைச் சோதிக்கக் கூடிய விஷயமாக அமைந்துவிட்டது ஒரு சமயம். அவ்வருஷம் ஐந்தாவது பாரம் படித்து வந்தாள் ஹேமா; அவர்கள் பள்ளிக்கூடக் கட்டட நிதிக்காக ஹேமாவின் நடனத்தை ஏற்பாடுசெய்தால் நிதி சேர்ந்துவிடும் என்று எண்ணினார் ஹெட்மிஸ்ட்ரஸ். அதற்காக ஹேமாவினிடம் தங்கள் அபிப்பராயத்தைச் சொல்லி, "வீட்டில் சம்மதிப்பார்களாவென்று அறிந்துவந்து சொல்லு. பிறகு நாங்கள் வந்து கேட்கிறோம்" என்றார்.

பள்ளிக்கூடத்திலிருந்து வந்ததும், ராஜாவினிடம் விஷயத்தைச் சொன்னாள் ஹேமா.

"ஓ அவ்வளவு பிரபலமடைந்து விட்டதா உனது நாட்டியம். உனக்குச் சம்மதந்தானே?"

"என் சம்மதமென்று தனியாக இருக்கிறதா. உங்கள் இஷ்டப்படி நடப்பதுதான் என் சம்மதம் மாமா" என்றாள் எதிரிலிருந்த நாற்காலியின் சாய்மானத்தைப் பிடித்தவாறே.

"அப்படியல்ல, உனது பள்ளிக்கூடம். உனது உழைப்புத் தேவையாக இருக்கும், எனக்குத் தேவையில்லாதிருக்கும். உன் உழைப்பைத் தடுக்க நான் யார்?" என்று சிரித்தவாறே கூறினான்.

"உழைக்கும் நிலைமைக்குக் கொண்டுவந்தவர் யார்? அவருக்கில்லாத உரிமை வேறு யாருக்கு? நான் நன்றியற்றவளாகமாட்டேன்" என்றாள் அவளும் சிரித்தவாறு.

"நன்றியுடன் நான் ஒத்துக்கொள்ளுவேன் என்று சொல்லு. எனது லக்ஷ்யம் கைகூடும் சமயம் நெருங்கிவிட்டது ஹேமா. ஸ்ரீநாத சர்மாவினிடமிருந்து அழைப்பு வந்துவிட்டது.

அந்த அழைப்பு வந்த சமயமும் நீ இப்பொழுது கேட்ட விஷயமும் ஒரே சமயத்தில் அமைந்தது பார். அதற்காகவே உன் நடனத்தை ஒத்துக்கொள்ளவேண்டும்.''

"நீங்கள் இவ்விடமேதானே இருப்பீர்கள். உங்கள் அபிப்பிராயம் அறிந்து வந்து சொன்னால் உடனே உங்களை வந்து பார்ப்பதாகச் சொன்னார்கள். போய் அழைத்து வரவா?''

"என் லக்ஷ்யம் கைகூடிவிட்ட சந்தோஷமானது குதித்து நடனம் செய்யலாமா வென்று துடிக்கிறது. நான் இவ்விடமே இந்தக் கடிதத்தைப் படித்தவண்ணம் இருப்பேன். நீ சென்று அழைத்துவா. சர்மா கையில் பரிசு பெறுவதைப் பற்றி உனக்குச் சந்தோஷமில்லையா? ஒன்றுமே சொல்லவில்லையே.''

"அதிக ஆனந்தம் ஏற்பட்டால் எப்படி வெளிக்காட்ட முடியும்? வெளிக்காட்டும் நிலைமை வந்துவிட்டால் பார்த்தவர்கள் பயித்தியக்கார விடுதிக்கு அனுப்ப ஏற்பாடு செய்வார்களல்லவா?'' என்று சிரித்தாள்.

"அப்படியா? சந்தோஷ மிகுதியால் தெருவில் நடனமாடிக்கொண்டு போகாதே. வண்டியை எடுத்துக்கொண்டு போ."



''டீச்சர் வருவதற்குள்ளேயே உங்கள் ஆனந்த நடனத்தை முடித்து விடுங்கள்'' என்றாள். இருவரும் சிரித்தார்கள்.

ஹேமா படியிறங்கி வரும்பொழுது கீழ்ப் படியில் நின்றுகொண்டிருந்த பிரேமாவின் முகம் கோபத்தால் சிவந்திருந்தது. அவளைத் தாண்டிச் சென்ற ஹேமாவை நோக்கி வந்த வண்ணம், "ஹேமா! எங்குப் போகிறாய்; சற்று நில்" என்று அதட்டினாள்.

''டீச்சரை அழைத்துவரப் போகிறேன்'' என்று தயங்கியபடி அருகில் வந்தாள்.

''எதற்காக?''

விஷயத்தைச் சொன்னாள்.

''அதெல்லாமிருக்கட்டும்; இப்பொழுது நான் சொல்லுவதைக் கேட்டுப் பிறகு போ. நீ இன்னும் குழந்தையல்ல. யௌவன மங்கையுடனல்லாது பிரமன் அழகெல்லாம் சேர்த்து உன்னைச் சிருஷ்டித்து இருக்கிறான். உன் கலையைமட்டும் கிரஹித்துக் கொண்டு உன் அழகைப் பார்வையுடன் நிறுத்திக் கொள்ள உனது மாமா பீஷ்மரல்ல. நீ இனிமேல் அவர் தனியாக இருக்குமிடம் சென்று சிரித்துப் பேசுவது என்பது கூடாது.' எல்லா விஷயங்களிலுமிருப்பது போல், வாழ்விலும் பங்குக்கு வந்தாயானால் நான்லேசில் விடமாட்டேன். உன்னைக் கொல்லுவேன், அல்லது நான் சாவேன், தெரியுமா? ஜாக்ரதை.'' என்றாள்.

ஒரு சட்டி நெருப்பைத் தலையில் கொட்டினாற் போலிருந்தது. பேச நாவெழாமல் கண்களில் நீர்ததும்ப நின்றாள் ஒரு கணம். சட்டெனச் சமாளித்துக் கொண்டு, ''மாமி! இவ்வளவு கடுமையான வார்த்தை பேசும்படி நான் ஒரு தப்பிதமும் செய்யவில்லையே. இதுவரை நடந்து வந்தது போல் என்றும் நடந்தால் தவறில்லையென்று நினைத்தேன். சிரித்துப் பேசுவது தவறு என்று நீங்கள் அபிப்பிராயப்பட்டால் இனி, பேச மாட்டேன். கொலை விழக்கூடிய நிலைமை ஏற்படக் கூடாது. நான் நன்றி கெட்டவளல்ல'' என்று கண்ணில் தளும்பிய நீரைத் துடைத்துக் கொண்டு விர்ரெனச் சென்றுவிட்டாள்.

போகும் வழியில் அவள் மனம் அடைந்த வேதனைக்கு எல்லையில்லை. கொஞ்ச நாட்களாகப் பிரேமா தனது விஷயத்தில் ஒருவிதமாக நடந்து வந்த காரணம் புலனாயிற்று. "சே, என்ன ஆட்டமும் பாட்டும் வேண்டியிருக்கு. ஊரில் அப்பா கொண்டுவரும் பிரசாதத்தைச் சாப்பிட்டுவிட்டு நிம்மதியாகக் காலம் கழிக்கலாம்'' எனத் தோன்றினது. இவ்வளவு பாடுபட்ட ராஜாவின் மனம் நோக நடப்பது நியாயமாகுமா? சற்றுமுன் அவன் அடைந்த ஆனந்தம்? புவனேசுவரத்தில் இருந்தால் ஸ்ரீநாத சர்மாவின் பரிசு வாங்க முடியுமா? ஒரு நன்மையைப் பெற பல இன்னல்கள் ஏற்படுவது சகஜம்தானே என்று மனதைச் சமாதானப் படுத்திக்கொண்டாள்.

ஹேமா சென்றதும் மாடியேறி வந்த பிரேமாவைப் பார்த்த ராஜா, "நல்ல சமயத்தில் வந்தாய். சந்தோஷ சமாச்சாரம், என் லக்ஷ்யம் கைகூடிவிட்டது, இதோ பார்'' என்று ஒரு கடிதத்தை அவள் கையில் கொடுத்தான். அதை வாங்கிப் பார்த்துவிட்டு, ''ரொம்ப சந்தோஷம். லக்ஷ்ய புருஷரே, உங்களுக்கு ஓர் எச்சரிக்கை'' என்றாள்.

ஏதோ பூகம்பத்திற்கு முன்னறிவிப்பு என்பதை உணர்ந்து மனதைத் தயார் செய்துகொண்டு,

"தாராளமாகச் செய். அதற்கு உரிமையில்லையா?"

"சற்றுமுன் சிரித்துக் கும்மாளமடித்தீர்களே, அதுபோல் இனி ஹேமாவிடம் நடந்துகொள்ளக் கூடாது."

"இது என்ன எச்சரிக்கை? நான் வளர்த்த பெண் ஹேமா."

"நான்முகன் அவன் சிருஷ்டித்த பெண்ணைத் தான் மோகித்து மணந்து கொண்டான்."

"உள்ளமறிந்து பழகினவளான நீயா இப்படிப் பேசுவது? உனக்கு என்னிடத்தில் நம்பிக்கை இல்லையென்றால்தான் என்மீது சந்தேகப்பட வேண்டும்."

"அதெல்லாம் வீண் பேச்சு. 'நேருக்குநேர் கண்ணிருக்கும், நெஞ்சுக்குள்ளோர் பெண்ணிருக்கும் ஆண்களுக்கு' என்பது எனது திடமான அபிப்பிராயம். சீக்கிரமாக அவளுக்குக் கல்யாணம் செய்துவிட வேண்டும்."

"அவள் கல்யாணம் என்பது சாதாரண விஷயமல்ல. அதற்கு அவள் தகப்பனும் என் தாயும் இருக்கிறார்கள். உனது திடமான அபிப்பிராயத்தை விடாமல் பிடித்துக்கொண்டிரு. அம்மாவின் கீழ் வளரும் ஹேமாவைப் பற்றி யாரும் குறை கூற முடியாது. உன்னை மனைவியாக அடைந்த பின்பு வேறு பெண்கள்மீது என் மனம் எப்படி நாட்டம் கொள்ளும்? கவலையில்லாமலிரு. கலைப் போட்டிக்குக் காசிக்குப் புறப்பட ஆயத்தம் செய்."

"ராமேசுவரம் போய்வந்த பின்புதான் காசியைப் பற்றிப் பேசவேண்டும்."

"ராமேசுவரமா? நாம் என்ன கிழவர்களாகி விட்டோமா, இல்லையென்று தீர்மானம் செய்ய? என் லக்ஷ்யம் நிறைவேறிய பிறகுதான் மற்ற விஷயங்கள்."

"என் லக்ஷ்யம் நிறைவேறினால்தான் உங்கள் லக்ஷ்யம் கைகூட முடியும். இல்லையென்றால்?" என்று நிறுத்தினாள் பல்லைக் கடித்தவாறு.

மேலே ஏற்படப்போகும் பூகம்பத்தை ஏற்க மனமில்லாதவனாக, "சரி அடுத்த வாரம் ராமேசுவரம் போய்வருவோம் சரிதானே?"

"ஹேமா கூட வரக்கூடாது. அங்கேயும் கலை கலையென்று அவளைச்சுற்றிக்கொண்டு திரிய ஆரம்பித்துவிடுவீர்கள்."

"பரதேவதா, அவளுக்கு இப்பொழுது ராமேசுவரம் அவசியமில்லை. அவள் தகப்பனாரிடம் அனுப்பிவிடுகிறேன்."

ராமேசுவரம் போய்த் திரும்பும் சமயம் பிறந்தகம் செல்லவேண்டுமென்று பிடிவாதம் செய்த பிரேமாவை அவ்விடம் விட்டுவிட்டு ஹேமாவை அழைத்துவந்தான்.

கலை விழாவிற்கு வரமாட்டேனென்று சொல்லிவிட்டாள். நேரில் சென்ற ராஜாவின் மனம் நோகப் பேசி அனுப்பிவிட்டாள். வெளியோருக்குப் பிரேமாவிற்கு உடம்பு சரியில்லையென்று சொல்லிக்கொண்டார்கள், லக்ஷ்ய புருஷனும் அவன் தாயும்.

பத்திரிகைகளில் பத்தி பத்தியாக வந்த விமர்சனத்தையும், நேரில் கண்டு வந்த பிரேமாவின் தந்தை சொன்ன புகழ் மொழிகளையும் கேட்கும் பொழுது, தான் செய்தது முட்டாள் தனமான காரியம் எனத் தோன்றலாயிற்று பிரேமாவிற்கு.

ராஜா தன்னை வந்து அழைத்த சமயம் அவன் அவளை அவசியம் வந்துதானாகவேண்டுமென்று சொன்னபொழுது, இதற்காக என்னை உங்கள் வீட்டிற்கே வரவேண்டாமென்று சொன்னாலும் அக்கரையில்லையென்று சொன்னதற்கு, 'பிரேமா! இதுவா பேச்சு. அந்த மாபெரும் கலை விழாவில் என் மனைவி என்னருகில் இருக்கவேண்டுமென்ற அவாவினால் இவ்வளவு தூரம் வற்புறுத்தினேன். உனக்கு இஷ்டமில்லாவிடில் கட்டாயப்படுத்தும் கசடனல்ல நான். உன் வீடு உனக்காக என்றும் திறந்துதானிருக்கும்' என்று பதில் சொல்லிவந்தான்.

"பிரேமா நீ செய்தது வடிகட்டின முட்டாள் தனம். ஸ்ரீநாத சர்மா ஆசிகூறும் சமயம், 'இவளை உன் மனைவியாக்கிக்கொள்வது சாலச் சிறந்ததுதான். ஆனால் கலையைக் கணவன் கண்கொண்டு பார்க்காமல் குருவின் கண்களால் அனுபவித்தாயானால் கலாசேவை செய்தவனாவாய்; லக்ஷ்ய புருஷனாக விளங்குவாய்' என்றார்.

'எனக்கு மனைவி இருக்கிறாள்.'

'எனக்கு அறிமுகம் செய்யவில்லையே ஏன்?'

'திடீரென்று ஏற்பட்ட தேக அசௌக்யத்தினால் வர முடியவில்லை. மிக நன்றாக வீணை வாசிப்பாள்.'

'ஓ அப்படியா? உன்னைப்பற்றிய தகவல் சொன்னவர்கள் ஹேமமாலினியை நீ அழைத்து வைத்து ஆதரவு காட்டும் விஷயத்தைச் சொன்னார்களே தவிர, இது விஷயம் பற்றிச் சொல்லவில்லை. அதனால் அப்படிச் சொல்லிவிட்டேன் மன்னித்துக்கொள்' என்றார்.

'ஐயோ இதென்ன நீங்கள் என்னிடம் மன்னிப்புக் கோருவதாவது? தாங்கள் சொன்னதுபற்றி எனக்கு யாதொரு வருத்தமுமில்லை. ஹேமமாலினியைக் கலாசேவைக்கென்றே வளர்த்து வருகிறேன். நீங்கள் பார்த்து எப்பொழுது யாருக்குக்

கல்யாணம் செய்து கொடுக்கச் சொன்னாலும் அப்படிக் கொடுக்கிறேன் என்றேன்."

இவ்வாறு சொன்ன பொழுது தனது செய்கைக்கு மன்னிப்புக்கோரலாமா வென்றுகூடநினைத்தாள். ஆனால் அவளது பொறுமைக்குணம் அதற்கு இடமளிக்கவில்லை. ராஜாவின் தாய் வந்து அழைத்ததும் கூடச் சென்றுவிட்டாள். கலையுலகில் உன்னத ஸ்தானத்தில் உலவிவரும் ஹேமாவைப் பொறுமைக் கண்கொண்டே பார்த்தாள் பிரேமா. பிறகு நடனமாடுவதுடன், வாய்ப்பாட்டும் நன்றாகப் பாடுவாள். ஆனால் சபைக் கச்சேரி, என்று ஏற்படும் பொழுது, அவளுக்கென்று ராஜா பக்க வாத்யம் வீணை வாசிப்பான். இந்த மாறுதலுக்காகக் கச்சேரி ஒத்துக்கொள்ளுவது என்பது மிக அருமையாக இருக்கும். விடாப்பிடியாகச் சிலபேர் அழைப்பார்கள். தட்ட முடியாமல் ஒப்புக் கொள்ளுவான். வழக்கத்திற்கு நேர்மாறான இந்தக் கச்சேரியை அனுபவிக்க ஜனத்திரள் கூடும். சபாக்காரர்களுக்கு வசூல் அபரிமிதமாகக் கிடைக்கும். இந்தவிதமாக உதவிக் கச்சேரி என்றால் மட்டுமே ஒப்புக்கொள்ளுவான். மற்றப்படி ஹேமாவின் நடனத்திற்கென்று ஓர் தம்படி வாங்கமாட்டான். கலை மகளும், அலை மகளும் அவளிடம் சேர்ந்து குடி புகுந்திருந்ததினால் கலா சேவை செய்ய அவனுக்கு வசதி கிடைத்தது. அரங்கேற்றத்திற்கு மட்டும் ஐயாயிரம் ரூபாய் செலவழித்தான். இது விஷயம் பிரேமாவிற்குக் கொஞ்சம்கூட இஷ்டமில்லை. அந்த ரூபாய்க்குச் சரியாகத் தனக்கு வைர நகை வேண்டுமென்று கேட்டாள். உடனே வாங்கிக் கொடுத்துவிட்டான். அடுத்தபடியாக ஹேமாவின் தந்தைக்கு மிக வேண்டியவரான தனிகர், வெகுநாள் கழித்துத் தமக்குப் பிறந்த பிள்ளைக் குழந்தையின் பிறந்தநாளுக்கு, ஹேமாவின் நடனத்தை ஏற்பாடு செய்தார். அவர் வைர மாங்காய் மாலையொன்றை நடனமாடும் பொழுது அணிந்துகொள்வதற்காக என்று சொல்லிப் பரிசாகக் கொடுத்தார். அவள் நடனமாடும்பொழுது அணிந்துகொண்டாள் எடுப்பாக இருக்கும்படியாக.

திரும்பி வந்ததும் "மாமி! இம்மாலை உங்களுக்குத்தான் நன்றாக இருக்கும்" என்று சொல்லிப் பிரேமாவின் கையில் கொடுத்தாள் ஹேமா. உனக்குப் பரிசாக வந்ததை எனக்கு ஏன் கொடுக்கிறாய் என்றுகூடக் கேட்காமல் வாங்கி வைத்துக் கொண்டாள்; தன் கணவன் அவள் விஷயமாகச் செலவழித்ததற்கு ஈடு இது என எண்ணிக் கொண்டவளாக. இது விஷயம் ராஜாவிற்கு வருத்தம் தரும் என்று தெரிந்துமே செய்தாள். அவளை ஒன்றுமே கேட்கவில்லை. ஹேமாவைத் தனிமையில் கூப்பிட்டு "என் உத்தரவின்றி அவளிடம் மாலையை ஏன் கொடுத்தாய்? பரிசு வந்ததை விநியோகிப்பது புத்திசாலித்தனமான காரியமல்ல?" என்றான்.

பதிலொன்றும் பேசாது தலைகுனிந்தவாறு இரண்டு பொட்டுக் கண்ணீர்தான் விட முடிந்தது அவளால். அவள் படும் மன வேதனையை அவனிடம் எப்படி எடுத்துக்கூறமுடியும்?

"கண்ணீர் விடும்படியாக உன்னை என்ன சொல்லிவிட்டேன்?" என்றான் அதுவரையிலும் சொல்லியறியாத கடுமை தொனிக்க,

"தெரியாமல் கொடுத்துவிட்டேன்; மன்னித்து விடுங்கள். தயவுசெய்து திருப்பிக் கேட்டுவிடாதீர்கள். நடனத்திற்குச் செல்லும் சமயங்களில்

நானே கேட்டு வாங்கிப் போட்டுக்கொள்ளுகிறேன்'' என்ருள் துக்கம் தொண்டையைக் கவ்வ.

பிறகு ஒரு சமயம் நடனத்திற்குப் புறப்படும் பொழுது மாலையைக் கேட்டாள் ஹேமா. ''நான் நடனம் பார்க்க வரப்போகிறேன். அதனுல் நான் போட்டுக்கொள்ளப்போகிறேன்'' என்று சொல்லிவிட்டாள். அதிகமாக ஒருநாளும் ஹேமாவின் நடனத்திற்குப் போகாதவள் அன்று கிளம்பினுள்.

இவைகளுக்கும் ஹேமா தணிந்துபோய்வந்தாள். அப்படியிருந்தும் பிரேமாவின் மனம் சாந்திபெறவில்லை. எந்தவித உபாயமாவது செய்து, ராஜா, அவன் தாயார் இருவரும் சேர்ந்து ஹேமாவை விலக்கும்படி செய்யவேண்டுமென்று வழிதேடிக் கொண்டிருக்கும் சமயம், ராமேசுவரம் சென்று வந்த பலன் ஏற்பட்டுவிட்டது. மசக்கையின் பாதையிலகப்பட்டுக்கொண்டதினுல் மற்ற விஷயங்களைக் கவனிக்க முடியவில்லை. பிரசவத்திற்குப் பிறந்தகம் சென்றுவிட்டால் ஹேமாவும், ராஜாவும் தனியாக இருக்கும்படியாய்விடுமென்று பயந்தவளாக, பிடிவாதமாகப் பிறந்தகம் செல்ல மறுத்துவிட்டாள். ஆனுல் ஹேமாவின் பணிவிடை மட்டும் அவளுக்கு மிக அவசியமாக இருந்தது. பிரசவமோ மிக்க அபாயத்திலிருந்து தப்பவைத்தது. ஆனுல் பூர்ண சந்திரனைப் பழிக்கும் விதமாக ஒரு பெண் குழந்தை பிறந்தது. அதைக் கையிலேந்திக் கொஞ்சும் பாக்யம் அவளுக்குக் கிடைக்கவில்லை. பிரசவித்தது முதல் படுத்த படுக்கையாளுள். காலேஜுப் படிப்புடன், குழந்தை வளர்ப்பையும், பிரேமாவிற்குப் பணிவிடை செய்யும் பொறுப்பையும் ஏற்றுக்கொண்டாள் ஹேமா.



எலும்புருக்கி நோய் என்று டாக்டர்கள் சந்தேகப்பட்டார்கள். ஸானிடோரியத்திற்கு அனுப்பினுர்கள். வேண்டிய பணம் செலவழித்தார்கள். தேருத கேஸ் என்ற முடிவிற்கு வந்த டாக்டர், ராஜாவினிடம் தனிமையில் விஷயத்தைச் சொல்லி, வீட்டிற்கு அழைத்துச் செல்லும்படி சொல்லிவிட்டார். ராஜா, டாக்டர் இருவருடைய ஒத்துழைப்பினுல், வியாதி சற்றுக் குணமாகி வருகிறது. வீட்டிலேயே நல்ல காற்ருேட்டமான இடத்தில் படுக்கையில் வைத்து, புஷ்டியுள்ள ஆகாரமும் மருந்தும் கொடுத்துவந்தால், நன்ருகக் குணமாகிவிடும் என்று பெற்ருேருக்கும் உற்ருேருக்கும் சொல்லப்பட்டது. வெளிக்கு அவ்விதம் சொல்லிக்கொண்டாலும் ராஜாவின் மனம் சொல்லொணு வேதனையடைந்தது. தனது லக்ஷ்யம் நிறைவேறி, சந்தோஷவானில், ஜோதிநக்ஷத்திரமாக உலவ ஆரம்பிக்கும் சமயம், கவலை மேகம் குறுக்கே சஞ்சரிக்க நேர்ந்ததுபற்றி அவனுல் சிந்தனை செய்யவே முடியவில்லை. வைத்தியர் கைவிட்டாலும் விதி கைதூக்கிவிடலாகாதா? என்ற ஓர் சிறு நம்பிக்கை வைத்திருந்தான். அவசியமான வேலையாகச் செல்லவேண்டிய சமயம் தவிர மற்றப் பொழுதை மனைவியின் பக்கத்தில் அவளுக்கு வேண்டியதைச் செய்வதில் கழித்து வந்தான்.

தன்னிடம் உயிரையே வைத்திருக்கும் கணவனை, தனக்கும் அவன்மீது அளவற்ற பிரேமை இருந்தும், வீண் மனப் பிராந்தியில், பொருமையில் அது தலையெடுக்காமல் நசுக்கி, வாழ்க்கையை ரசமற்றதாகச் செய்துகொண்டோமே என்று படுக்கையில் கிடந்த பின்புதான் தோன்றலாயிற்று. அவளைத் தன்னுல் எவ்வளவு கேவலமாக நினைத்து நடத்தமுடியுமோ அவ்வளவு நடத்தியும் கடுஞ் சொற்களாலும், சுடு சொற்களாலும் வாட்டியதைக் கொஞ்சங்கூட எண்ணுமல் தன்னையும், குழந்தையையும் எவ்வளவு அன்புடன் கவனித்து வருகிருள்; சற்றுக்கூட மனஞ்சலிக்காமல் முகஞ்சுளிக்காமல் பணிசெய்யும் அந்த ஹேமாவின்மீது இரக்கம் தோன்றலாயிற்று. இந்தப் புத்தி, படத்தின் நிகழ்ச்சியின்பொழுது வந்திருந்தால், தனது வாழ்த்து எவ்வளவு வளம் பெற்றிருக்கும். அப்பெண்ணின் வதைதான் இப்படி வந்து நேர்ந்ததோ என்று நினைவில் வந்து நின்றது சிந்தனை. நீண்ட மூச்சு விட்டாள். இதற்குப் பிராயச்சித்தம்? மறுபடியும் சிந்தனை தொடர்ந்தது.

(தொடரும்)

# வைரத்தின் கதை

அ. வேணுகோபாலன்

வைரம் பார்ப்பதற்கு ஒருவித கண்ணாடியைப் போலிருக்கும். இது கிடைப்பது அபூர்வமாதலால், இதன் விலை அதிகம். இயற்கையாக வைரம் ஸ்படிக ரூபத்தில் கிடைக்கிறது; அப்பொழுது அதைப் பார்த்தால் ஒருவித பிரகாசமுமில்லாமல், ஒளி குன்றிச் சாதாரண கண்ணாடியைப் போலிருக்கும். வைர வேலையில் கைதேர்ந்த நிபுணர்கள் இதைச் சாணையில் தீட்டி, கணக்குப்படி கோணங்களமைத்துப் பட்டை தீட்டிய பிறகுதான் இதன் பிரகாசம் பெருகுகிறது.

பழைய காலத்தில் வைரம், வைடூரியம், கோமேதகம், மாணிக்கம், நீலம், மரகதம் முதலானவைகளை அழகிய அணிகலன்களாகத் தயாரித்து அணிந்துகொண்டனர் மக்கள் என்று தெரியவருகிறது. இருந்தபோதிலும் வைரத்திற்கு மற்றவைகளைப்போல அவ்வளவு சிறப்பில்லை; காரணம் பட்டை தீட்டாததற்கு முன்பு சாதாரணமாக ஒருவித ஒளியுமின்றியிருந்ததினால் மக்களைக் கவரவில்லை; பிற்காலத்தில் பட்டை தீட்டும் கலையை அறிந்த பிறகு, இதற்குப் பட்டை தீட்டிப் பார்த்து, பட்டை எவ்வளவுக்குத் தீட்டுகிறார்களோ அவ்வளவுக்கு அதன் பிரகாசம் அதிகரிக்கலாயிற்று. வைரத்தைப் போல மற்றவைகளிலும் சிலவற்றிற்குப் பட்டை தீட்டினால், அதன் பிரகாசம் அதிகரித்து மக்களைக் கவர்ந்ததினால், வைரத்திற்குப் பட்டை தீட்டுவதைப்போல மற்றும் சிலவற்றிற்கும் பட்டை தீட்ட ஆரம்பித்தனர்.

வைரம் தோன்றி, சுமார் 50 கோடி வருடங்களாயின என்று அபிப்ராயப் படுகின்றனர்! சிலர் ஆயிரக்கணக்கான வருடங்களுக்கு முன்புதான் வைரம் தோன்றியிருக்குமெனக் கூறுகிறார்கள்; எனவே, எப்போதுதான் தோன்றியது என்று திட்டமாகக் கூறமுடியாது.

வைரத்தின் உபயோகத்தை முதன் முதலாக அறிந்தது இந்தியாதான். இத்தனிப் பெருமை நமக்கே உரியதாகும். ரோமாபுரி, முதலிய பிறநாடுகள் இந்தியாவிற்கு வந்து வைரத்தை வாங்கிச்சென்றதாகச் சரித்திரம் கூறுகிறது.

1925-ஆம் வருடம் உலக விஞ்ஞானிகளுள் ஒருவரும், இந்தியாவின் தலைசிறந்த விஞ்ஞானியுமான சர். சி. வி. ராமன் அவர்கள் ருஷ்ய விஞ்ஞானக் கழகத்தின் அழைப்பிற்கிணங்கி அங்குச் சென்றிருந்தபோது, கிரெம்லின் என்ற இடத்திற்குச்சென்றார். அங்கு வைத்திருந்த வைர, வைடூரிய, கோமேதகக் கற்களையும் பிற அணிகலன்களையும் பார்வையிட்டார்; அங்கு உலகத்திலேயே சிறந்த காதரைன் ராணியின் வைர முடியும் பிரகாசித்துக்கொண்டிருந்தது. அம்முடியில் வைர, கோமேதக மாணிக்கங்கள் பதிக்கப் பெற்று வெகு அழகாக ஜ்வலித்துக்கொண்டிருந்தது. இவைகளையெல்லாம் பார்த்து ரஸித்த, சிறந்த வைர ஆராய்ச்சியாளரான ராமன் அவர்கள் அம்முடியில் பதிக்கப்பெற்றிருந்த வைரக் கற்களையும் கண்டார்.

உலகப் பிரசித்தி பெற்ற காதரைன் வைரமாயிருந்தாலும், நம் நாட்டு- தென்னிந்தியாவின் வைரமாகும் அது. சிறந்த ஆராய்ச்சியாளரான ராமன், அம்முடியில் பிரகாசித்துக் கொண்டிருக்கும் வைரத்தை கண்டு, இந்தியாவின் வைரந்தானதுவென அறிந்து கொண்டு கேட்க, முடிவு தெரிந்தது.

ஒரு சமயம் திருச்சிராப்பள்ளியிலிருந்த ஓர் ஆலயத்தின் விக்கிரகத்தின் கண்களுள் ஒன்றாக இருந்தது இந்த வைரம்! இதைப் பிற்காலத்தில் வெள்ளையர்கள் 'கிரேட் மொகல் என்ற பெயரால் குறிப்பிட்டிருப்பதாகத் தஸ்தாவேஜுகளிலிருந்து தெரிகிறது. இதன் மதிப்பையறிந்து ஒரு பிரெஞ்சு ராணுவ உத்யோகஸ்தன் அதைக் கவர எண்ணங் கொண்டு, ஹிந்துவைப் போல

வேஷம் பூண்டு சமயம் கிடைத்த போது அதைத் திருடிச் சென்றுவிட்டான்; இவனிடமிருந்த இந்த வைரத்தைப் பற்றியறிந்த ஒரு கப்பல் தலைவன், இவனைக் கடலில் தள்ளிவிட்டு, இந்த வைரத்தை இலண்டனில் 60,000 டாலர்களுக்கு விற்றிருக்கிறான்! இப்படியாகப் பல கைகள் மாறி 1770-ல் ஆர்லோ பிரபு என்பவனால் ரஷியாவின் பட்டமகிஷியாயிருந்த ராணி காதரைனுக்குக் கொடுக்கப்பட்டு அப்போதிலிருந்து ரஷியாவின் செல்வமாக இருந்து வருகிறது. உலகப் புகழ் பெற்ற இத்தென்னிந்திய வைரம் ஆர்லோ பிரபு இதைக் கடைசியாக வைத்திருந்ததால் "ஆர்லோ வைரம்" என்னும் பெயரும் இதற்குண்டு.

உலகத்திற்கே முதன் முதலாகவைரத்தை விற்றது இந்தியா தான். பின்னர் பல்வேறு பாகங்களிலும் கிடைத்ததின் காரணமாக, இந்திய வைர வியாபாரம் க்ஷீணிக்க ஆரம்பித்தது நாளடைவில்.

வைரத்திற்கு எவ்வளவு தான் மதிப்பிருந்தாலும் இது வெறும் கரி தான்! விஞ்ஞான ரீதியாக வெகு எளிதில் நிரூபிக்கலாமிதை. பிளாட்டினத்தால் செய்யப்பட்ட ஒரு பாத்திரத்தில் சிறு வைரத்துண்டை வைத்து அப்பாத்திரத்தை மின்சாரத்தோடிணைக்க வேண்டும்; ஒரு கண்ணாடி ஜாடியில் பிராண வாயுவை நிரப்பி, அதனுள் சுண்ணாம்பு நீரை நிரப்பி, பிளாட்டினப் பாத்திரத்தை இதனுள் வைத்து, காற்றுப் புகாதபடி பாதுகாக்க வேண்டும்.

மேலே குறிப்பிட்டபடி, பிளாட்டினப் பாத்திரத்தில் வைரத்தை வைத்து, இதைச் சுண்ணாம்பு ஜலம் நிரப்பியுள்ள கண்ணாடி ஜாடிக்குள் வைத்து மின்சாரத்தோடிணைத்து விட்டால், இது வெண்ணிறமாகி, வைர முழுவதும் எரிந்து மறைந்துவிடும்! கண்ணாடி ஜாடியைச் சற்று ஆட்டினால் சுண்ணாம்பு நீர், வெள்ளையாகப் பால்போல் வெளுத்துவிடும்.

சுண்ணாம்பு நீர், கரியமில வாயு கலந்தால் தான் வெளுக்கும். வைரப் பரிசோதனை செய்யும்போது ஜாடியைக் காற்றுப் புகாதபடி மூடியிருப்பதால், கரியமில வாயு எங்கிருந்து வந்தது? வைரம், பிராணவாயுவோடு சேர்ந்து எரிந்த போது தான் இப்புதிய கரியமிலவாயு உற்பத்தியாயிருக்க வேண்டும். கரியமிலவாயு என்பது கரியும், பிராணவாயுவும் சேர்ந்து உண்டாவதால் வைரம், கரி என்பதில் சிறிதும் சந்தேகமில்லை.

இயற்கை வைரம் அதிக விலையுடையது. எனவே, விஞ்ஞானிகள் செயற்கை வைரத்தைக் கண்டு பிடிக்க முயன்றார்கள். 1897-ல் மாய்சன் என்ற பிரெஞ்சு விஞ்ஞானி, செயற்கையாக வைரத்தைச் செய்து பார்த்தார். சில வைரத் துணுக்குகள் கிடைத்தன.

இரும்பைக் கொதிக்க வைத்து, உருக்கி, அதன் மத்தியில் கரியை நுழைத்து, திடீரென இரும்பைக் குளிரச் செய்வது தான் இந்த நூதன முறை! இவ்வாறு கொதித்திருக்கும் இரும்பில் கரியைப் புகுத்தினால், இரும்புருக்கு அதை நொறுக்கி வைரமாக்குகிறது. இதைத்தான் செயற்கை வைரமென்பது.

ஆனால், இம்முறையில் வைரம் தயாரித்து விற்றால் லாபம் கிடைக்காது. காரணம் செயற்கை முறையில் முதன் முதலாகத் தயாரான சில வைரத் துணுக்குகளைத் தயாரிக்கவே ஏராளமான பணம் செலவாயிற்றாம். இப்படிச் செலவினால் கிடைத்த வைரத்தின் மதிப்பு இரண்டரைரூபாய் தானாம்! இதனால், லாபம் கிடைக்குமா நீங்களே சொல்லுங்கள். லாபமில்லாமல் யார்தான் வேலை செய்வார்கள்?

வைரங்கள் சீக்கிரமாக உஷ்ணத்தைக் கிரகிக்கும் சக்தி வாய்ந்தவை. இவை ரேடியோக்களில் உபயோகமாகும் 'வால்வ்' தயாரிக்கவும் உதவுகின்றன. கடியாரங்களில் இருக்கும் 'ஜுவல்ஸ்' களைக்கூட இதனால்தான் தயாரிக்கிறார்கள். ஆனால், இது நிஜ வைரமல்ல; இதைக் கல்ச்சர் வைரங்கள் என்று குறிப்பிடுகிறார்கள். இந்தியாவில் இந்தக் கல்ச்சர் வைரத்தைத் தயாரிப்பதில்லை. அன்னிய நாடுகளிலிருந்து வரவழைத்துப் பட்டை தீட்டும் வேலை மாத்திரம் இங்கே நடைபெற்று வருகிறது. இப்படி இறக்குமதியாகும் வைரத்தின் மதிப்பு சுமார் 50 லட்ச ரூபாயாகும். இந்தியாவில் பட்டை தீட்டும் வேலை திருச்சி, ஜெய்ப்பூர், திருச்சூர் முதலான இடங்களில் நடைபெறுகிறது.

உலகத்திலேயே இந்தக் கல்ச்சர் வைரங்களை உற்பத்தி செய்வது சுவிட்ஸர்லாந்து, பிரான்ஸ், ஜெர்மனி, அமெரிக்கா நாடுகள் தான். இவற்றில் 5 கம்பெனிகள் சுவிட்ஸர்லாந்திலும், மற்ற நாடுகளில் ஒவ்வொரு கம்பெனியுமிருக்கின்றன.

கல்ச்சர் வைரத்தின் மொத்த உற்பத்தி 400 டன்களாகும். இதில் சுமார் 50 டன்

களை இந்தியா இறக்குமதி செய்து கொள்ளுகிறது வருடா வருடம்.

இத்தொழிலை நம் நாட்டிலும் நடத்தச் சிலர் முன்வந்தனர். வேறு நாடுகளில் எல்லா விதத் தொழில்களுக்கும் அரசாங்கம் உதவி, ஊக்கமூட்டி, தொழில் வளரப் பாடுபடும் போது நம் இந்திய அரசாங்கம் தொழில் மன்னன் என்று கூறப்படும் திரு. ஜி. டி. நாயுடு அவர்களால் கல்ச்சர் வைரம் உற்பத்தி செய்ய ஆரம்பிக்கவிருந்த கம்பெனிக்கு அனுமதி வழங்க மறுத்து விட்டிருக்கிறது!

ஒரு துறையில் சிறந்தவரென்றால் அவர் யாராயிருந்தாலும் அவருக்கு உதவி, அவரின் திறமையைப் பயன்படுத்திக் கொள்ளத் தயங்கக்கூடாது அரசாங்கம். திரு. நாயுடு ஏட்டுப் படிப்பைப் படிக்காதவரென்றாலும், ஏட்டுப் படிப்பைப் படித்தவர்களைவிட நுணுக்கமாக ஒவ்வொரு விஷயத்தையும் துருவிப் பார்க்கும் ஆற்றல் மிக்கவர். பல தடவை உலக யாத்திரை சென்றவர்; அச்சமயத்தில் புதிய புதிய கருவிகளை—அன்று வரை பார்த்தேயில்லாத கருவிகளின் நுணுக்கங்களை எளிதில் கிரகித்து, மேல் நாட்டினரையே அதிசயத்தில் மூழ்கடித்தவர். இவ்வளவு திறமைசாலியான இவர், இந்தியாவில் தொடங்கியிராத பல தொழில் நுணுக்கங்களை யறிந்து, அவைகளை இந்தியாவில் ஸ்தாபிக்க முயற்சித்தார்; ஆனால், அரசாங்கத்தின் அசிரத்தையாலும், உதவியின்மையாலும் இம்முயற்சிகளைக் கைவிடும் படியாக நேர்ந்தது.

1950-ல் ஐரோப்பாவுக்குச் சென்றிருந்த போது கடிகார உற்பத்தி செய்யும் யந்திரங்களை இந்தியாவில் ஆரம்பிக்க, விலை கொடுத்து வாங்கி வந்தார். ஆனால், வழக்கம்போல் அரசாங்கக் கெடுபிடிகளினால், அவ்வியந்திரங்களெல்லாம் வீணாகச் சோம்பிக் கிடக்கின்றன.

வேறு நாடுகளுக்கு யாத்திரை போகும் போதெல்லாம் நாயுடு அவர்கள் அங்கே காணும் தொழில் வளர்ச்சியை அறிந்து, அத்தொழில்களையும் நம் நாட்டில் ஸ்தாபிக்கக் கனவு காணுவார். பிளேட், பேனா, சைக்கிள், மோட்டார் போன்ற தொழில்களை ஸ்தாபிக்க முயலுகையில் ஏதாவது ஒன்று குறுக்கிட்டு அம்முயற்சியை நிறுத்திவிடும்.

ஸ்விட்ஸர்லாந்துக்குப் போயிருந்தபோது கல்ச்சர் வைர உற்பத்தியை அறிந்து, அதை இந்தியாவில் ஸ்தாபிக்க விரும்பினார்; ஆனால், இந்திய அரசாங்கம் மூலதன வெளி). இறக்குமதி லைசென்ஸ் என்ற பற்பல காரணங்களைக் காட்டி அவர் முயற்சிகளை நிறுத்தி விட்டது.

ஆனால் இதே தொழிலை ஸ்தாபிக்க ஸ்ரீ வர்மா என்பவருக்கு அனுமதியளித்திருப்பது விந்தையாயிருக்கிறது! இந்தப் பாரபட்சமேன்? சுதந்திர இந்தியாவில் தொழில் நடத்த ஒருவருக்கு அனுமதியில்லை; மற்றவருக்கு மாத்திரம் இந்த அனுமதி எப்படிக் கிடைத்தது என்பது அறியமுடியாத புதிராயிருக்கிறது!

திரு. நாயுடு அவர்களுக்கு அனுமதியளிக்காமற்போனாலும், ஸ்ரீ ஜி. எம். வி. வர்மாவுக்காவது அனுமதியளித்தார்களேயென்றாவது மகிழ்ச்சியடையலாம். நமக்கு வேண்டியது தொழில் வளர்ச்சி; அதை யார் வளர்த்தாலென்ன?

செயற்கைக் கமலம் (கல்ச்சர் வைரம்) உற்பத்திசெய்யவேண்டிய சீதோஷ்ண நிலை, மின்சார வசதி போன்றவைகள் எளிதில் கிடைக்கும் பைகாராவிலே இத்தொழிற்சாலையை நிறுவப்போகிறார்களாம். இதைப் பொறுப்பேற்று நடத்துபவர் ஸ்ரீ ஜி எம். வி. மேத்தா என்பவர்தான்.

இக்கம்பெனியின் மூலதனப் பங்கு 49 சதம் ஸ்விஸ் அரசாங்கமும், 51 சதம் இந்தியாவுமாகக் கொடுக்கும். மற்றும் ஸ்விஸ் நிபுணர்கள் யந்திரங்களுடன் வேண்டிய உதவிகளைச் செய்வார்கள். சீக்கிரமாகக் கம்பெனியைத் துவக்கவேண்டுமென்கிற ஆவலிலே ஒரு கம்பெனியை ஸ்விஸ் நாட்டிலிருந்து கிளப்பி இங்கே துவக்கப்போகிறார்களாம்! இவ்வளவு தொல்லைகளும் ஏன் என்றால், தொழில் ரகசியங்களை ஸ்விஸ் நாட்டார் சுலபமாகச் சொல்லிக்கொடுக்க விரும்பவில்லை.

இத்தொழில் இந்தியாவில் நன்றாக நடக்குமென எதிர்பார்க்கப்படுகிறது; ஏனெனில் சாதாரண மக்களும் வாங்கி அணியக்கூடிய குறைந்த விலையில் இதை விற்க முடியும். பல்வேறு உருவங்களில் மக்கள் இதை அணிகிறார்கள்; தவிர, கடிகாரங்கள், மின்சார சம்பந்தப்பட்ட வேலைகளுக்கும் இது உபயோகமாவதால், இத்தொழிலுக்கு நல்ல எதிர்காலமிருக்கிறது.

உபயோகமாவது தவிர, இன்னும் எந்தெந்த விதங்களில் இதை உபயோகிக்கலாம், அபிவிருத்தி செய்யலாமென ஆராய்ச்சியாளர்கள் ஆராய்ந்துகொண்டிருக்கிறார்கள்.

இவர்கள் முயற்சியால் இத்தொழில் இன்னும் பன்மடங்கு வளருமாக.

# தாய்மை

~ஆர். சுப்பிரமணியன்~




கார் அம்பராம் பாளையம் சந்திப்பைத்தாண்டி விட்டது. பொள்ளாச்சியை நோக்கித் திரும்பும்போது இரண்டு தடவை குலுக்கியது.

"உங்களுக்கு எப்போது கலியாணமாயிற்று?" என்று கேட்டார் ஜோஸப்.

மேலதிகாரிக்குப் பதில் சொல்லும் பாவம் தொனிக்க, "மூன்று வருஷமாகிறது ஸார்!" என்றான் ஸ்ரீதரன். அன்று ஏப்ரல் மாதம் பன்னிரண்டாந்தேதி. அவனுக்குக் கலியாணமாகிச் சரியாக மறுநாளோடு மூன்று வருஷங்கள் முடியப் போகின்றன. ஸ்ரீதரன் பெருமிதத்தோடு ஒரு பெருமூச்சு விட்டான்.

அவனுக்கு இருபத்தொன்ருவது வயதிலேயே கலியாணம் செய்யவேண்டுமென்று அவன் தகப்பனுர் பிடிவாதம் பிடித்தபோது அவன் போட்ட சண்டைகள் எத்தனையோ? "எனக்கு என்ன வயதாகிவிட்டது? இந்தக் காலத்தில் பெண்களுக்குக் கூட இந்த வயதில்தானே கலியாணம் நடக்கிறது. நான் ஒப்புக்கொள்ளமாட்டேன். உத்தியோகத்துக்குப்போய் இரண்டு வருஷங்களாவது தாராளமாகச் செலவு பண்ணி ஹாய்யாக இருந்துவிட்டுத்தான் கலியாணம் செய்துகொள்ளப்போகிறேன்." என்று அவன் சொல்லிக்கொண்டிருந்தான்.

ஆனுல் அதற்கெல்லாம் அவன் தகப்பனுர் செவி சாய்க்கவே இல்லை. அடங்கினபிள்ளையாகப் பெண் பார்க்கப் போனுன். ஆனுல் அவன் வார்த்தைகளுக்குக் கடைசியாக முற்றுப்புள்ளி வைத்தவள் அவன் முன் பின் அறியாத அந்தப் பெண்தான். ஜானகியைப் பார்த்த பிறகு அவன் கொள்கைகள் எல்லாம் காற்றில் பறந்து போய் விட்டன. ஒரு கவலைமட்டுமே மிஞ்சி நின்[illegible]

அது ஜானகியை அவனுக்கு முன்னால் வேறு யாரும் கலியாணம் செய்து கொண்டு போய்விடக் கூடாதே என்பது தான்.

அதற்குப் பிறகு அவன் தகப்பனார் அவனுடன் விவாதிக்கவேண்டிய அவசியமே ஏற்படவில்லை. காரியங்களெல்லாம் சொல்லிவைத்தாற்போல் நடந்தன. மாப்பிள்ளையை அழைத்தார்கள். கன்னிகாதானம் செய்தார்கள். ஊஞ்சலில் உட்காரவைத்து நாலு தடவை உலுக்கி உலுக்கி ஆட்டினார்கள். ஊர்வலம் விட்டுப் பத்து கூடை பட்சணங்களோடு ஊருக்கும் அனுப்பிவைத்தார்கள்.

ஸ்ரீதரன் உத்தியோகம் ஏற்றுக்கொண்டு இரண்டு மாதங்கள் ஆயின. அவன் உண்டு அவன் வேலை உண்டு என்று இருந்தான், எப்படியோ இருக்கட்டும். குடித்தனம் வைக்கவேண்டுமென்ற பொறுப்பு அவனுக்கு இல்லையா என்ன? என்று அவன் தகப்பனார் பேசாமல் இருந்தார். இரண்டு மாதங்கள் ஆயின, அப்புறம் கொஞ்சம் சஞ்சலப் பட்டார். அதற்குப் பிறகு இரண்டு மாதங்கள் ஆயின. தைரியமாகப்பின் வருமாறு எழுதினார்.

''சின்ன வயதிலேயே உனக்கு எண்ணெய்ப் பக்ஷணம் எதுவும் ஒத்துக்கொள்ளாதே? எப்படி நீ ஹோட்டலில் சாப்பிடுகிறாய்? உன்னை யார் கவனித்துக்கொள்கிறார்கள்? உனக்கு யார் துணை? சாயங்காலம் நீ அலுத்துப்போய் வீட்டிற்கு வரும் போது உன்னை யார் வரவேற்கிறார்கள்?...'' என்று ஒரு மாதிரியாக எழுதினார்.

சுவரில் அடித்த பந்துபோல அவனிடமிருந்து பதில் வந்தது. 'உங்கள் கடிதம் கிடைத்தது. ரொம்ப சந்தோஷம். இவ்வளவு நாளும் எண்ணெய்ப் பக்ஷணத்தையே சாப்பிடாமல் ஏங்கிக் கிடந்த எனக்கு இப்போது அவைகளையும் சாப்பிடுவதற்கு ஒரு சந்தர்ப்பம் கிடைத்திருக்கிறது. இங்கே ஹோட்டல் சாப்பாடு அருமையாக இருக்கிறது, நான் காலையில் சீக்கிரமே சாப்பிட்டு விட்டுப் போய்விடுவதால் ருசி ஒன்றும் அவ்வளவாகத் தெரிவதில்லை, அது ஒரு சௌகர்யம். பகலில் எனக்கு வேண்டியபேர் துணை இருக்கிறார்கள். ராத்திரியில் இரண்டு நாளாக இரண்டு பூனைகளும் குட்டிகளும் இங்கே வந்து குடியேறி இருக்கின்றன. வீடு கலகலப்பாய் இருக்கிறது. சாயங்காலங்களில் நான் கிளப்புக்குப் போய்விடுகிறேன். அங்கே என்னை என் நண்பர்கள் அத்தனைபேரும் எதிர்பார்த்துக்கொண்டிருக்கிறார்கள்.

பதில் பளிச்சுப்பளிச்சென்றிருந்தது. அவர் சாமர்த்தியம் இங்கே பலிக்கவில்லை. ஆனாலும் அவர் விடவில்லை. அப்படியும் இப்படியும் ஆறு மாதங்களுக்குப் பிறகு அவனே குடித்தனம் வைத்தான். அதுவும் வேறு வழியில்லாமற் போனதால் வைக்க வேண்டியதாயிற்று. ஹோட்டல் சாப்பாடு உடம்புக்கு ஒத்துக்கொள்ளவில்லை. அவன் இருந்த சின்ன அறை அவனுக்குப் போதவில்லை. அதனால் தான் அவன் ஜானகியை அழைத்துக் கொண்டு போகவேண்டியதாயிற்று. அப்படித்தான் அவன் எல்லாரிடமும் சொன்னான்.

அப்புறம் இரண்டரை வருஷங்களுக்கு மேல் ஆகிவிட்டன. நாளையோடு மூன்று வருஷங்கள் ஆகப்போகின்றன. இப்போது அவன் பெருமூச்சில் ஒரு பெருமிதம் இருந்தது.

அதற்கும் ஒரு காரணம் இல்லாமற் போகவில்லை. காலேஜில் அவன் படிக்கும் போது அவன் கற்றுக்கொண்ட கொள்கைகள் சில உண்டு. அவைகளுள் ஒன்று இந்தியா தேசம் உருப்பட வேண்டுமானால் அதன் ஜனத்தொகை அளவில்லாமல் அதிகமாகிக்கொண்டே போகக்கூடாது என்பது. 'வயதான பிறகு கல்யாணம் செய்து கொள்ளவேண்டும். கல்யாணம் செய்துகொண்டாலும் குழந்தைப் பேற்றை முக்கியமாகக் கருதக்கூடாது' என்றெல்லாம் அவன் பிரசங்கங்கள் செய்தது உண்டு. ஆனால் அவனைப் பொறுத்த வரையில் முதல் அம்சத்திலேயே அவன் தவறி விட்டான். வெகு விரைவிலேயே அவன் கல்யாணம் செய்துகொண்டபோது அவன் நண்பர்கள் எல்லோரும் அவனை அளவில்லாமல் பரிகாசம் செய்தார்கள். ''ஸ்ரீதரா! உன் கொள்கைகள் ஏதாவது பாக்கி இருந்தால் சீக்கிரம் ஒரு புத்தகமாக எழுதிவிடு. மற்றவர்களாவது அதைப் படித்து அதன்படி நடக்கட்டும். இரண்டு வருஷங்கள் போனால் உனக்குக் குடும்பப் பொறுப்புகளுக்கு நடுவே மற்ற எதற்கும் நேரம் கூட இருக்காது'' என்று ஒருவன் கலாட்டா செய்தான். ஒருவன் வெள்ளியில் சிறிய தொட்டில் பரிசு கொடுத்தான். இன்னொருவன் அதில் ஸெலுலாயிட் பொம்மை



ஒன்றைப் போட்டு ஆட்டினான். அவைகளைப் பார்க்கும் போதும் அவர்கள் பேச்சைக் கேட்ட போதும் அவனுக்குக் கோபம் பொத்துக்கொண்டு வந்தது. அதை யாரிடம் காண்பிப்பது என்று தெரியவில்லை. ஜானகியிடம்தான் காண்பிக்கலா மென்று நினைத்தான். அவளை நேருக்குநேர் பார்த்தபோது அவனுக்கு அதற்கும் மனம் வரா மல் போய்விட்டது.

அப்போது அவன் செய்துகொண்ட தீர்மானம் அது. சிறிய வயதிலேயே கல்யாணம் செய்து கொண்டுவிட்டாலும் நாலைந்து வருஷங்களுக்கா வது தந்தையாக ஆவதில்லை என்று தீர்மானித் துக் கொண்டான். மூன்று வருஷங்கள் அவன் வெற்றிகரமாகக் கடத்திவிட்டான். அந்தப் பெருமைதான் அவன் மனம் முழுமையும் அன்று நிறைந்திருந்தது. தன்னையே ஒரு தடவை மெச் சிக் கொள்வதற்குக் கூட அவன் தயங்கவில்லை.

கார் நின்றது. அவர் வீடு வந்துவிட்டது. ஜோஸப் கீழே இறங்கினார். அவனும் பின்னா லேயே இறங்கினான்.

"அப்போது வேறு ஒன்றுமில்லையே? நீங்கள் போய்விட்டு வாருங்கள்." நெற்றி வரைக்கும் அவன் கை சொல்லி வைத்தாற்போல் உயர்ந்து கீழே இறங்கியது.

மணி இரண்டு இருக்கும். ஹோட்டலில் சாப் பிட்டுவிட்டு வீட்டுக்கு வந்து சேர்ந்தான். உடம்பு அலுத்து வந்தது. பூட்டைக் கழற்றிக் கொண்டு கதவை உதைத்தான். ஈஸிசேரை இழுத்துப் போட்டான், உடுப்புக்களை மாற்றிக் கொண்டு பேப்பரும் கையுமாக உட்கார்ந்தான்.

வீடு வெறிச்சென்று கிடந்தது. அவன் மனதி லும் ஒரு வெறுமை பரவிக் கிடந்தது. அது எப் படி அங்கே குடிகொண்டது என்பது அவனுக்கே அதிசயமாக இருந்தது.

ஜானகி ஊருக்குப் போயிருக்கிறாள். போய்ப் பதினைந்து நாட்கள் ஆகி இருக்கலாம். அவள் போவது இது முதல் தடவையல்ல. எவ்வளவோ தடவைகள் போனது உண்டு. சர்வ சாதாரண மாக அவன் வாழ்க்கையில் நடக்கும் எத்தனையோ சம்பவங்களில் அதுவும் ஒன்று. அதை அவன் பாராட்டியதில்லை. இந்தத் தடவைகூட அவளுக் குப் போக இஷ்டமில்லை. அவனேதான் வற் புறுத்தி அனுப்பிவைத்தான். இருந்தும் அவன் மனதில் என்னவென்று எடுத்துரைக்க முடியாத ஓர் உணர்வு இழையோடியது. ஏதோ வெறி தான ஒரு நிலை—சூன்ய நிலை—அவனை யறியாமல் அவன் மனதில் புகுந்து அவனுக்குச் சலிப்பைத் தந்தது.

ராத்திரி சாப்பிட்டுவிட்டு மாடியில் சாய்வு நாற்காலியில் படுத்துக் கொண்டிருந்தான். அவன் மனதில் பழைய சம்பவங்கள் அவனையும் மீறி எழுந்தன.

முதன்முதலாக ஜானகி வீட்டுக்கு வந்த புதிது. இதேமாதிரி நிலா காய்ந்துகொண்டிருந்தது. இரண்டு பேரும் என்னென்னவோ பேசிக்கொண் டிருந்தார்கள். அலுப்பு கண்ணைப்பற்றிச் சுழற் றியது. அவன் எப்போது தூங்கினானோ அவ னுக்கே தெரியாது. அவனை யாரோ உலுக்கி எழுப்பினார்கள்.

"பாலைக்கூடச் சாப்பிடாமல் தூங்கி விட்டீர் களே?"

அரைத் தூக்கத்துடன் அதைக் குடித்துவிட்டு அவன் உள்ளே போனான். கட்டில் மேலிருந்து அவன் படுக்கையை மட்டும் எடுத்துக்கொண்டு வந்து வராந்தாவில் போட்டுக்கொண்டான்.

அன்று பூராவும் அவன் சொல்லிவிட வேண்டு மென்று நினைத்தது அது. ஆனால் எவ்வளவு தடவை அமுக்கிவிட்டாலும் மேலேயே வந்து கொண்டிருக்கும் நீரில் மிதக்கும் மரத்துண்டைப் போல அவன் சொல்ல நினைத்தது அவன் வாயி னின்றும் வெளிப்படாமலேயே நின்றுவிட்டது. இப்போதும் அதற்குச் செய்கையில் உருவம் கொடுக்கத்தான் அவனால் முடிந்தது.

நிமிர்ந்து பார்க்காமல் பேசினான். "சரி, நீ போய்ப் படுத்துக் கொள்." அவளை ஏறிட்டுப் பார்க்கும் தைரியம் அவனுக்கு இல்லை. அவள் கொஞ்ச நேரம் அங்கேயே நின்றாள். பிறகு உள்ளே போய்ப் படுத்துக்கொண்டாள், அவள் வெகு நேரம் தூங்கவில்லை. அது அவனுக்குத் தெரியும், அவனுக்கும் உறக்கம் பிடிக்கவில்லை.

கொஞ்ச நாளைக்கு இந்த நாடகம் தினம் நடந் தது. ஆனால் அவன் கொள்கையைப் புரிந்து கொள்ள அவளுக்கு அதிக நாட்கள் பிடிக்க வில்லை, "பிள்ளைப் பேற்றை அவர் விரும்பவில்லை யானால் எனக்கு மட்டும் அது எதற்கு?" என்று நினைத்தாள்.

அவன் சில சமயங்களில் சங்கடப்பட்டதுண்டு. "நான் பின் பற்றும் வழி சரியானதா? ஒரு வேளை நான் அவளை ஏமாற்றி என்னையும் ஏமாற் றிக்கொள்கிறேனோ?" என்று அவன் சந்தேகப் படுவான். அவள் அவனுடன் பேசினாள்; பழகி னாள்; விருப்பு வெறுப்புகளை உணர்ந்து அனு சரித்துப் போனாள். வேண்டியவற்றைக் குறிப்ப றிந்து சமைத்துப் பரிமாறினாள். அவன் அவளை ஒவ்வொரு வழியிலும் சந்தோஷப்படுத்த முயன் றான். அவளுக்குப் பிடித்தவற்றை அவன் கேட் காமலேயே வாங்கிச் கொண்டுவந்து கொடுத் தான். அவள் செய்த அற்ப காரியங்களைக் கூடப் புகழ்ந்தான். மற்றவரைப் புரிந்து கொள்ள வேண்டும் என்ற அவா அவர்கள் இருவரிடமும் தீவிரமாக இருந்தது. ஆனால் ஏதோ ஒன்று அவர்களைப் பிரித்தது. அறிய முடியாத ஒரு சூன்யம் அவர்கள் இருவரையும் ஆட்டி வைத்தது,

அவளால் அதைத் தாங்க முடியவில்லை. அவனாலும் அதைப் பொறுக்க முடியவில்லை. கடைசியில் அவனும் இல்வாழ்க்கையை அனுபவிக்க முன் வந்தான். ஆனாலும் இது வரை அவன் தீர்மானம் பாழ்படவில்லை. இன்னும் அந்த வீட்டில் இரண்டே குழந்தைகள் தான் இருந்தார்கள். அவன் ஒரு குழந்தை; அவள் ஒரு குழந்தை.

அன்று ஒருநாள் நடந்த சம்பவம்; அவன் மனதில் மாறாத இடம் பெற்றுவிட்டது அது. ஆபீஸிலிருந்து கொஞ்சம் சீக்கிரமாகவே வந்துவிட்டான் ஸ்ரீ[illegible]ன். வந்தவன் உள்ளே வரவில்லை. கால் செருப்பைக் கழற்றாமலேயே வாசற்படி ஓரமாக நின்றான்,

எதிர் வீட்டு டாக்டரின் பெண் பத்மா அவள் மடியில் உட்கார்ந்துகொண்டிருந்தாள். ஜானகி அவளுக்குத் தலைபின்னிப் பூ வைத்துக்கொண்டிருந்தாள்.

"மாமி! இப்போ எனக்குப் பூ வைக்கிறேள்! இன்னும் கொஞ்ச நாளுக்கப்புறம் தம்பிப்பாப்பாவுக்கும் வைக்கணும், அதுக்கு ஒன்கிட்ட பூ இருக்கோ?"

"அது யாருடி தம்பிப் பாப்பா?"

"அம்மா வயித்துக்குள்ளே தூங்கறானாம். அப்பா சொன்னா. இன்னும் கொஞ்ச நாள் கழித்து என்னோடு விளையாட வருவானாம்."

அவள் சட்டென்று பத்மாவைத் தூக்கி முத்தமிட்டாள். அதில்கரைகாணாத ஆர்வம் ததும்பியது. பொங்கிவரும் பல்வேறு உணர்ச்சிகளைப் பிரதிபலிக்கும் ஒரு சிறு செய்கை அது. அத்தோடு மட்டும் அது நின்றுவிடவில்லை. வெளியிடமுடியாமல் சிறைப்பட்டுக் கிடக்கும் ஒரு ஏக்கத்தின் நிழலும்கூடத்தான் அது. மற்றவர்களுக்கு அது எளிதில் புலப்படாவிட்டாலும் வாசற்படியில் நின்றுகொண்டிருந்த ஸ்ரீதரனுக்குக் கண்கூடாகத் தெரிந்தது.

அவன் உள்ளே வந்தான். அவள் காப்பி கொண்டுவரப் போனாள். காப்பி போட்டுக் கொண்டு வந்து அவள் கொடுத்தபோது அவன் அவளை ஏறிட்டுப் பார்த்தான். அவள் கண்களில் நீர் கரையிட்டிருந்தது.

"அழுகிறாயா என்ன?"

"அடுப்பு அநியாயமாகப் புகைகிறது!"

உண்மையில் அவள் மனம்தான் புகைந்து கொண்டிருந்ததோ என்னவோ?

"குடும்பக் கட்டுப்பாடு", "ஒரே பிள்ளை", "இந்திய ஜனத்தொகை" போன்ற எத்தனையோ புத்தகங்கள் அவன் அவளுக்கு வாங்கிக்கொடுத்திருக்கிறான். அவைகளை அவள் வாங்கி ஆர்வத்

தோடு படித்திருக்கிருள். எத்தனையோ வித வித மான மருந்துகள் அவளிடம் அவன் வாங்கிக் கொடுத்திருக்கிருன். அவள் எதையும் மறுத விததில்லே. தன்னுடைய ஒவ்வொரு செய்கை யையும் அவள் மனப்பூர்வமாக ஆமோதிக்கிருள் என்றுதான் அவன் எண்ணினுன். அதில் அவ னுக்குச் சந்தேகம்கூடத் தோன்றியதில்லே.

ஆனுல் ஆறு மாதங்களுக்கு முன்னுல் நடந்த சம்பவம் அவனே ஆட்டிவைத்தது. அவனுல் அவளேப் புரிந்துகொள்ள முடியவில்லே அவள் மன நிலே, இதய அந்தரங்கம், அதில் தோன்றி மறைந்துபோகும் ஆசாபங்கங்கள் யாவும் அவ னுக்கு விளங்காத புதிர்களாகத் தோன்றின. அதை அறியவேண்டுமென்ற ஆவலும், அதில் இருக்கக்கூடிய சங்கடங்களேப் பற்றிய கவலேயும் அவனே அலேக்கழித்தன.

டாக்டரின் மனேவி ஊருக்குப் போய்விட்டாள். வீடு வெறிச்சென்று ஆகிவிட்டது. ஜானகி எதையோ இழந்து விட்டதைப்போலத் தவித் தாள். அவளேத் தவிர இவளுக்கு ஆறுதல் அளிக் கக்கூடிய முகம் வேறு எதுவும் அவளுக்குப் புலப் படவில்லே, அவளோடு கொச்சை மொழியில் பேசும் குரலேக் காணவில்லே. பறிக்காத பூ செடி யின் காம்பிலேயே வாடி உதிர்ந்துகொண்டிருந் தது. அவள் இயந்திரம் மாதிரி வேலேசெய்து கொண்டிருந்தாள்.

அவர்கள் இன்றும் புதிய தம்பதிகளேப்போலத் தான் பழகினுர்கள். சாயங்காலம் வெளியே போய்விட்டு வந்தார்கள் சினிமாவுக்குப் போனுர் கள், அவன் அவளுக்கு என்னவெல்லாமோ வாங்கிக்கொண்டுவந்து கொடுத்தான். என்ன என்ன பேசலாமோ அவைகளேப் பேசி மற்ற வரை மகிழ்விக்க வேண்டுமென்ற ஆதரம் இரு வருக்கும் இருந்தது.

ஆனுல் அந்த ஆதரம் அவர்கள் மறைக்க விரும் பிய ஒரு தவிப்பின் நிழலாக இருந்தது. மற்றவர் உணர்ந்துகொள்ளக்கூடாது என்ற தவிப்புடன் அவர்கள் ஒவ்வொருவரும் தங்கள் பலவீனத்தை மறைத்தார்கள். அதனுல் யாவும் செயற்கை யாகத் தென்பட்டன. எல்லாம் போலி விளே யாட்டுகளாகத்தான் தோன்றின, விரும்ப முடி யாத ஒரு வெறுமை அவர்களிடையே படர்ந்தது.

அன்று நல்ல மழை கொட்டியது. அவன் ஆபீ ஸிலிருந்து வரநேரமாகிவிட்டது. அவள் நனேந்து ஈர உடலுடன் அங்கும் இங்கும் நடந்து வேலே செய்துகொண்டிருந்தாள். சாப்பிடும்போதுதான் அவன் அவளேக் கவனித்தான்.

"ஏது இத்தனே ஈரம்?"

"வேலேக்காரி வரவில்லே."

"நீ ஏன் மழையில் நனேந்து வேலே செய்கிருய்? உடம்பு என்னத்துக்காகும்?"

"என்ன ஆனுல் என்ன? எப்படியோ ஆகட்டும்; பூட்டிப் பூட்டிவைக்க இங்கே என்ன இருக்கிறது அப்பேர்ப்பட்ட பொக்கிஷம்?"

அவள் பேச்சில் ஒரு அலாதியான விரக்தி தொனித்தது. அலட்சியபாவம் பரவிக் கிடந் தது. அதை அவன் உணராமல் போகவில்லே. பேசாமல் சாப்பிட்டுவிட்டு வந்தான்.

அன்று இரவே அவளுக்கு உடம்புக்குவந்தது. ஜ்வரம் அடிக்க ஆரம்பித்தது. மறுநாள் அவன் அலட்சியமாக இருந்துவிட்டான். ஜ்வரம் அதிக மாயிற்று. அன்று இரவு அவள் பிதற்ற ஆரம் பித்துவிட்டாள்.

"பத்மா! ஊருக்குப் போகிருயா? போய்விட்டு வா! வரும்போது எனக்குத் தம்பிப் பாப்பாவைக் கொண்டுவரணும்... போயிட்டுவா..... போயிட்டு ......வா......உன் அம்மா கொடுத்துவை...த்...த வ...ள்.

என்னென்னவோ பிதற்றினுள். அவன் சிலே யாக உட்கார்ந்திருந்தான்.

லேடி டாக்டர் அவனுக்குத் தெரிந்தவள். "கொஞ்சநாள் ஒரு மாறுதலுக்காக ஊருக்கு அனுப்பிவையுங்களேன்" என்று சொன்னுள். அவன் அவளிடம் அதைச் சொன்னுன். "உங்களே விட்டுவிட்டு நான் எங்கேபோக?" என்று அவள் கேட்டாள். அவளுக்குப்போக இஷ்டமில்லே. அவன்தான் வற்புறுத்தி அனுப்பினுன். போய்ப் பதினேந்து நாளாகிறது.

ஊருக்கு அவளே அனுப்பின அன்று இதே மாதிரி நிலவு. அமாவாசை தாண்டி மூன்று நான்கு நாட்கள் ஆகி இருக்கலாம். சாயந்திரம் மணி ஏழு இருக்கும். ஜானகியை ரயிலில் அனுப்பிவிட்டு அவன் ஸ்டேஷனேவிட்டு வெளியே வந்தான்.

"என்ன ஸ்ரீதரன்? எங்கே இந்தப் பக்கம்?" பேசினவர் ஆபீஸ் ஹெட்கிளார்க்.

"வீட்டில் ஊருக்கு அனுப்பிவிட்டுப்போக வந் தேன்."

"என்ன சமாசாரம்?"

"எல்லாம் குடும்பபாரம்தான். அவளுக்கு உடம்பே சரியாக இல்லே."

அவர் ஒருமாதிரியாகச் சிரித்தார். அதற்கு அர்த் தம் அவர் அகராதியில்மட்டும்தான் கிடைக்கும்.

"குடும்ப பாரமா! இருக்கிறது இரண்டேபேர். எங்கள் வீட்டில் என்னேச் சேர்த்து முக்கால் டஜன் பேர்வழிகள் இருந்தும் பஞ்சப்படி சேர்த்து நூற்றுஐந்து ரூபாய்க்குத் தாளம்போடு கிறதே. இது என்ன பாரம்?"




உலகில் பிரக்யாதிபெற்ற மயர்ஸ் ஆட்டோமாடிக் வாட்டர் ஸிஸ்டம்கள் ஒவ்வொரு வீட்டிற்கும் அவசியமானவை. பல ஸைஸ்கள்.




**WATER SUPPLY SPECIALISTS LTD.,**

45, Thambu Chetty Street — MADRAS-1.

# THE INDUSTRIAL & PRUDENTIAL ASSURANCE CO. LTD.

(Established: 1913)

**Renowned for its Service, Security & Strength**

**PROGRESSIVE FEATURES:**

| | | | |
|---|---|---|---|
| **New Business completed in 1951** | | **Over Rs.** | **230 lakhs** |
| **Total Business in force:** | .... | **Over ,,** | **18·46 crores** |
| **Total Assets:** | .... | **Over ,,** | **590 lakhs** |

Variety of schemes at low premiums.
Controlled by well-known Directors.
Reputed for its LOW EXPENSE RATIO & PROMPT SETTLEMENT OF CLAIMS.

*Managing Director:*
**V. C. SETALVAD, Esq., B. A., LL. B.**

*Head Office:*
**Industrial Assurance Building**
**Fort, Bombay-1.**

*Madras Branch:*
**10, Linghi Chetty Street,**
**G. T., Madras-1.**

ஸ்ரீதரன் சிரித்தான். "ஸார்! நான் சொல்கிறேன் என்று கோபித்துக் கொள்ளாதீர்கள். இது நீங்கள் இருபது வருஷங்களுக்கு முன்னால் யோசித்திருக்க வேண்டிய சித்தாந்தம்!"

என்னென்னவோ பேசிக்கொண்டே போனார்கள். அவர் ஒரு பூக்கடையில் அரையணாவுக்கு மல்லிகைப்பூ வாங்கினார்.

"யாருக்கு ஸார்?"

"கடைசிக் குழந்தை பெண் குழந்தை; சாயங்காலமெல்லாம் பூவுக்காக அழுது கொண்டிருந்தது."

அவன் பேசவில்லை. ஏழாவது குழந்தை: இருந்தும் அவருடைய அன்பு அந்த நிலையிலும் தடைபடாமல் போய்க்கொண்டுதான் இருந்தது. குடும்பக்கவலைகளோ வறுமையின் பிடிப்போ அதைக் கட்டுப் படுத்தவில்லை. அந்த வேதாந்தம் அவனுக்குப் புதியது. அவனுக்கு என்னவோ போல இருந்தது. வீட்டுக்கு வருகிற வரையில் பல எண்ணங்கள் அவனை ஆட்டிவைத்தன,

அவரைவிட அவன் புத்திசாலியாக இருக்கலாம்; ஒருவிதத்தில். அவனுடைய கொள்கை சரியாகவும் இருக்கலாம். அதில் அவனுக்கு வெற்றி உண்டு என்பதிலும் சந்தேகம்இல்லை. ஆனால் அவனுக்கு அதில் ஏதோ திருப்தியே இல்லை.

தூக்கம் கண்ணைச் சுற்றியது. ஸ்ரீதரன் எழுந்து போய், படுக்கையைப் போட்டுக்கொண்டான். எப்போது தூங்கினானே அவனுக்கே தெரியாது- தூங்கி எழுந்தான். காலை வந்தது, மாலை சென்றது. வாரங்கள் ஓடின. இரண்டு மாதங்கள் ஆகிவிட்டன,

ஜானகி ஊரிலிருந்து வந்துவிட்டாள். அவளைப் பார்த்ததும் அவனுக்கே ஆச்சரியமாக இருந்தது. அவள் உடம்பு நன்றாகத் தேறி இருந்தது. முகத்தில் அலாதியான காந்தி இருந்தது. அவ்வளவு நாட்கள் அவளிடம் அவ்வளவு அழகு குலுங்கி அவன் பார்த்ததே கிடையாது.

இரண்டு நாட்களுக்குப்பிறகு, காலை ஏழரைமணி இருக்கும். அவள் தண்ணீர் கொண்டு வர வெளியே போயிருந்தாள். அன்று ஞாயிற்றுக்கிழமை. அவன் அகஸ்மாத்தாகக்காமிரா உள்ளிற்குள் நுழைந்தான். காலில் ஏதோ தட்டியது. அவன் சட்டென்று அதை எடுத்துப் பார்த்தான். அது ஒரு சின்னக் கம்பளிக் குல்லாய்.



அவன் அதைப் பார்த்துக்கொண்டே இருந்தான். ஏடுகள்சொல்ல முடியாத கதைகளை அது சொல்லிக்கொண்டே இருந்ததைப் போன்ற பிரமை அவனுக்கு உண்டாயிற்று. அதை எடுத்து அவள் பெட்டிக்குள் வைக்கப் போனான். பெட்டியைத் திறந்ததும் அவன் கண்களில் தட்டுப்பட்டவை இரண்டு மூன்று மருந்துப் பெட்டிகள். அவைகளை அவன் எடுத்தான். அவைகளையெல்லாம் அவன் தான் வாங்கிக் கொடுத்தான். குழந்தைப் பேற்றைத் தடை செய்வதற்கானவை அவைகள். ஒரு பெட்டியும் பிரிக்கப்படக்கூட இல்லை. வாங்கிக் கொடுத்தபடியே இருந்தன. அவைகளைக் கையில் எடுத்துக் கொண்டு வெளியே நடந்தான்.

அன்று இரவு எட்டரை மணி இருக்கும். அவன் சாப்பிட்டுவிட்டுப் பேப்பர் படித்துக் கொண்டிருந்தான். அவள் சாப்பிட உட்கார்ந்திருந்தாள். ஏதோ நினைத்துக்கொண்டு உள்ளே போனான்.

"என்ன? சாப்பிடவில்லையா?"

"வேண்டாம். சாப்பிட முடியாது போல இருக்கிறது."

"ஏன்?"

"வாந்தியெடுக்க வருகிறது." பேசும்போதே குமட்டிக் கொண்டு வந்தது.

அவன் அவள் பக்கத்தில் போய் உட்கார்ந்து கொண்டான்.

"என்ன உடம்பு சரியாக இல்லையா?" அந்தக் கேள்வியில் இருந்த இதம் அவளை மயக்கிற்று.

தலை குனிந்தபடியே சொன்னாள். "இல்லை மூன்று மாதமாக......... நீ. நீங்கள் வாங்கிக் கொடுத்த மருந்துகளையெல்லாம் ...... சாப்பிட்டுக் கொண்டு தான்......வந்தேன். இருந்தாலும் ...... இருந்தாலும்..." பேசும் போதே அவளுக்குத் துக்கம் நெஞ்சை அடைத்தது.

அவனிடம் கோபத்தையோ, ஆத்திரத்தையோ அவள் எதிர்பார்த்தாள். நிமிர்ந்து பார்க்கக்கூட அவளுக்குத் தைரியம் இல்லை. அவன் அவளைச் சட்டென்று அணைத்துக்கொண்டான். அதன் அர்த்தம் அவளுக்குப் புரியவே இல்லை.




ரா. ஸ்ரீ. தேசிகன்

அம்பிகாபுரம் என்ற ஊரை நினைத்தால் போதும், இயற்கை அன்னையின் எழில் நம்முன் தாண்டவமாடும். அது ஒரு மலை அடிவாரத்தில் அமைந்து கிடக்கின்றது. காலை இளஞ்செங்கதிர்கள் அதன் உச்சியில் துள்ளி விளையாடும். அமைதி சூழும் அந்திப் பொழுதில் அது ஒரு தனி ஒளிக்கிரீடத்தை அணிந்த காட்சி அளிக்கும்.

மலைக்கப்பால் செறிந்த காடுகள் உண்டு. அவை இரவில் இருட்பிழம்புகள் போலத் தோன்றும். மலையிலிருந்து பாடி வரும் அருவிகளின் இன்னிசை மலர் மணத்தோடு குழைந்து, பழுத்த நிலவின் வெள்ளத்தில் பாய்ந்து, கரையுந் தோற்றங்கண்டு என்னுள்ளம் தேனிக்கும்.

இப்படி எழில் சொரியும் சூழ்நிலையில் தாலாட்டப்பட்ட ஒரு புராதனமான கோயில் அம் மலைச்சிகரமீது நின்றுகொண்டு 'வைகுந்தம் புகுவது மண்ணவர் விதியே' என்று உலகத்தாருக்கு நல்லதோர் உபதேசம் செய்யும். அத்தகைய கோயிலுக்குச் சென்று ஆண்டவனைத் தரிசிக்க முடியாத சில தீண்டாதார்களைப்பற்றி நான் பலகாலும் மனம் வருந்தியதுண்டு. என்ன பாவம் அவர்கள் புரிந்தனர்! ஏனோ ஆண்டவன் படைத்த மக்களில் ஒரு சாரார் விலக்கப்படவேண்டும், நம் நாகரிகத்திற்கே இதோர் இழுக்கன்றோ? ஒரு கறையில்லையா? ஒரு மாசுமாம். அதைத் துடைப்பது நம் கடமையன்றோ? என்றெல்லாம் சிந்திப்பேன், இப்படி எத்தனையோ உள்ளங்கள் சிந்தித்திருக்கக்கூடும். பலபேர் ஒக்கச் சிந்தித்தால் சமுதாயத்தில் ஒரு பெரும் புரட்சி ஏற்படாமற் போகுமோ? புரட்சி என்பது நம் ஆழ்ந்த எண்ணங்களின் எதிரொலிதானே. அவ்வெதிரொலி ஒருநாள் நாடெங்கும் முழங்கும் என்ற என் கனவும் எப்பொழுது பூத்துக் காய்த்துப் பழுக்குமோ? என்று ஏங்கின நாட்களுண்டு. தகர்க்கமுடியாச் சாத்திரச் சுவர்களும், வெறிமதப் பெருவேலிகளும், மண்டிக்கிடக்கும் வகுப்புப் போர் முட்புதர்களும் மறையுங்காலம் எக்காலமோ? என்று சிந்தித்து என் ஏழை நெஞ்சம் புண்ணுகும். செறிந்த அஞ்ஞான இருளில் மூழ்கித் தத்தளிக்கும் ஆதித் திராவிடருக்கு வைகறைக் காலம் நெருங்கிக்கொண்டிருந்தது,

* * *

மலைக்கு அடி வாரத்தில் ஒரு நீண்ட ஏரி விரிந்து கிடக்கின்றது. அதில் இயற்கைத் தேவி தன் அழகு பார்ப்பாள். விண்ணில் உலாவும் முகில்களின் நிழல்கள் அதன்மீது விழும்பொழுது நானாவித வர்ண ஜாலங்கள் தோன்றும். ஒரு வர்ணம் மற்றொரு வர்ணத்தைத் துரத்துவது போல ஒரு காட்சி மெல்ல எழும். இந்த அலகிலா விளையாட்டின் வனப்பை வாரி விழுங்குவேன், எழில் நறவுண்டு பாடிக் களிப்பேன். என் மன அரங்கில் உவகை தாண்டவமாடக் காண்பேன்.

இத்தகைய அழகு வாய்ந்த ஏரிகரை மீது ஒரு மண்டபம் உண்டு. அதில் தூய பனி தோய்ந்த காலையில் உபந்நியாசம் நடக்கும். வரதாச்சாரியார் மடை திறந்த வெள்ளம்போலத் தம் உயர்ந்த பேச்சைப் பொழிவார். திருமங்கை மன்னன் அருளிய ஒரு பாட்டின் ஒரு வரியை எடுத்துக்கொண்டு விரிவாய் உரைசெய்துகொண்டே போவார். "குலந்தரும் செல்வம் தந்திடும்" என்ற ஒரு பாசுரத்தை இசையோடு பாடிய பிறகு அதிலுள்ள சுவையைப் பிழிந்து மக்கள் நுகரும் வண்ணம் தருவார். அந்தணர் குலத்தில் நாம் பிறந்துவிட்டால், அதற்குமேல் என்ன குலத்தை நாராயணா என்னும் நாமம் நமக்கு அளிக்கும்? என்ற வினாவைத் தாமே எழுப்பி, அதற்கு

விடையும் தருவார். இங்கே 'குலம்' என்பது அடியார் குலத்தை-தாசர் குலத்தைக் குறிக்குமென்பார். ஓர் உன்னத நிலையில் குலம் போய்விடும். சாதிச் செருக்குக்கு அங்கே இடமில்லை என்று உருக்கமாய்ப் பேசுவார். பண்டைக் குலந் தவிர்த்து தொண்டர் குலத்தில் சேருங்கள் என்று நயம்பட அவர் உரைப்பார்.

*பழுதிலா வொழுக லாற்றுப்*
*பலசதுப் பேதி மார்கள்!*
*இழிகுலத் தவர்க ளேலு*
*மெம்மடி யார்க ளாகில்*
*தொழுமினீர் கொடுமின்*
*கொண்மி னென்று நின்னேடு மொக்க*
*வழிபட வருளி னுய்போன்*
*மதிள்திரு வரங்கத் தானே!*

திருமாலை (42)

இந்தப் பாட்டில் சாதிச்செருக்கு மதிள்கள் இடிந்து துண்டு துண்டாய்ச் சிதறி விழக் காணீர் என்று உள்ளங்கனிய அவர் பேசுவார். இத்தகைய சொல்லின் செல்வரை நான் நேரில் கண்டு பேசவேண்டுமென்ற ஆவல் என் உள்ளத்தே வளர்ந்து கொண்டே வந்தது.

* * *

ஒருநாள் காலை எட்டுமணி இருக்கும். திடீரென்று வானைச் சூல்கொண்ட மேகங்கள் போர்த்துவிட்டன. பல பேரிகைகள் ஆர்ப்பன போலப் பேரிடி முழக்கங்கள் எங்கும் எழுந்தன. ஆழ்கடல் அலைகள் கணக்கிலாச் சர்ப்பங்கள் போலப் படமெடுத்தாடின. காற்றின் ஓலங்கள் விலங்குகளின் ஓலத்தை ஒத்தன. மின்னல்கள் விண்ணின் மீது துள்ளி விளையாடின. மழை, மின்னல், இடி, காற்று—இவைகளுக்கிடையே சிக்கிய வரதாச்சாரியார்சுவாமி என் வீட்டை அடைந்தார்.

வாருங்கள், அடியேன் குடிசையில் பொன்னடி சாத்தவேண்டும்' என்றேன். ஏது இந்த மழையில் கிளம்பினீர்கள்? "தேசிகாசார் சுவாமியா? தேவரீர் திருமாளிகையா இது? உபந்நியாசத்திற்காகப் புறப்பட்டேன். மழை திடீரென்று வந்துவிட்டது."

"தங்களைப் பார்க்கவேண்டுமென்ற ஆவல் எனக்கு வெகுநாளாய் உண்டு?" என்றேன்.

"நாராயணன் மழை உருவம் தாங்கித் தங்கள் வீட்டிற்கு அழைத்து வந்துவிட்டான்.

*'நன்று பெய்யும் மழை காணில்*
*நாரணன் வந்தானென்றுலும்'*

என்று முணுமுணுத்துக் கொண்டே என் வேண்டுகோளுக்கிணங்கி என் அறையில் போடப்பட்டிருக்கும் சாய்வு நாற்காலியில் உட்கார்ந்து கொண்டு, "பத்திரிகையா? என்ன விஷயம்?" என்று என்னைக் கேட்டார்.

'வடக்கே பூகம்ப'மென்றேன்.

'அதில் அதிகச் சேதம் உண்டோ' என்றார்.

'ஆமாம். கணக்கிலா ஜனங்கள் மாண்டனர். அநேக ஊர்கள் இருந்த இடங்கள் தெரியாமல் மறைந்துவிட்டன. பிரமபுத்திர நதியில் வெள்ளம் மிகுதியாய்ப் போனதால் அந்நதி பல இடங்களில் பாய்ந்து ஆடுகள், மாடுகள், மனிதர்கள் வீட்டின் குடிசைகள் எல்லாவற்றையும் அடித்துக் கொண்டு போய்விட்டது. இதைப்பற்றி என்ன நினைக்கிறீர்கள்' என்றேன்.

'எல்லாம் தெய்வ சங்கற்ப'மென்றார்.

'ஒரு மஹான் என்ன சொன்னார் தெரியுமா' என்றேன்.

'என்ன சொல்லுங்கள்.'

'ஆதித் திராவிடரைத் தள்ளிவைத்த பாதகந்தான் இந்தப் பூகம்பத்திற்குக் காரணம்.'

"நான் சொல்லுகிறதைக் கேளுங்கள். ஆதி திராவிடரை — ஹரிஜனங்களைக் கோயிலுக்குள் நுழைய ஏற்பாடு செய்கிற காரணத்தால் இது நிகழ்ந்தது என்று நான் சொல்லுவேன். அவர்களின்மீது குற்றம் இல்லை. காலம் செய்கிற கோலம்" என்றார்.

"உபந்நியாசத்தில் சாதி போய்விடுமென்றீர்களே"

"ஆம், போய்விடும்; இப்பொழுதில்லை. ஒரு திருப்பாணாழ்வார்போல், ஒரு நந்தன்போல் மனிதன் பக்தி பரவசமானால், அப்பொழுது சாதியில்லை. நாம் பூணூலை அறுத்தெறியக்கூடாது; அதுவாக நழுவவேண்டும். காற்று அடிக்கத் தொடங்கினால் விசிறி தானே கீழே விழுந்துவிடும். மரம் ஒரு சிறிய தளிர்க் கொம்பாயிருக்கிறபொழுது அதைச்சுற்றி ஒரு வேலி வேண்டும். அதுவே ஒரு பெரிய வானளாவும் பூதாகாரமான மரமாய் வளர்ந்துவிட்டால், எத்தனை புயல்களையும் அது தாங்கும்.

'மதுரகவி ஆழ்வார் ஒரு பார்ப்பனராயிருந்தாலும் நான்காம் வருணத்தைச் சார்ந்த







# நீங்கள் எங்கிருந்தாலும்...

# ஹிமாலயா புக்கெ ஸ்னோ

## உபயோகியுங்கள்.




ஏனென்றால் இது பிரத்தியேகமாக இந்தியாவின் சீதோஷ்ணத்திற்கேற்ப தயாரிக்கப்பட்டது

சீதோஷ்ண நிலை எப்படி இருந்தாலும்—இந்தியாவில் நீங்கள் எங்கிருந்தாலும், ஹிமாலயா புக்கெ ஸ்னோ உங்கள் சருமத்தை அதிக மிருதுவாகவும், அழகாகவும் வைத்துக்கொள்கிறது. இதன் நறுமணத்தை நீங்கள் மிகவும் விரும்புவீர்கள்.

இன்னுமொரு நேர்த்தியான **இராஸ்மிக்** தயாரிப்பு

HBS. 6A-X30 TM

நம்மாழ்வார் காலில் விழுந்தார். எல்லாம் பக்குவம் வேண்டாமா?'' என்றார்.

'அப்படி வேதாந்த தேசிகர் செய்திருப்பாரா? தெரியாத மறை நிலங்கள் தெளிகின்றோமே என்றாரே?' என்று நான் கேட்டேன்.

''செய்திருக்கமாட்டார், காமதேனு வாலும் கோத்வம் போகாதிறே'' என்று சொல்லியிருக்கிறாரே' என்றார். எத்தனையோ விஷயங்களை அலசிச் சென்றார், பல கலைக் கடல்களை நீந்திக்கொண்டே போனார். எத்தனையோ உதாரணங்கள் காட்டியும் என் மனதிற்குச் சமாதானமில்லை; அமைதி இல்லை. ஹரிஜனங்களை ஒதுக்கிவைத்த பாதகம் ஹிந்து சமுதாயத்தைப் பாதிக்காமல் போகாதென்றெண்ணினேன்.

சற்று மழை நின்றது. பேரிடிக் குரலும் இறந்தது. அவர் போய் வருகிறேன் என்று சொல்லிப் போனார். 'எத்தனை பெரிய அறிவுக் களஞ்சியம், எத்தனை விரிவான கேள்விச் செல்வம். அறிவு வளர்ந்ததே ஒழிய, உள்ளம் விரியவில்லையே, வேதாந்தம் சொல்லளவில் நின்றதே ஒழிய, செயலில் இல்லையே' என்று மனம் நொந்தேன்.

மீண்டும் மழை பெய்தது; இடி இடித்தது; காற்று ஓலமிட்டது, மின்னல் விண்ணைக் கிழித்துக்கொண்டு சென்றது, என் சிந்தனையும் ஒரு தனிப்பாதையில் சென்றுகொண்டிருந்தது.

சில நாட்கள் தேய்ந்தன. ஆலயப்பிரவேசத்தைப்பற்றி நாடெங்கும் முற்போக்காளர்கள் தீவிரமாய்ப் பேசினார்கள். பண்டைப் பண்புகளில் தோய்ந்த மக்கள் தம் ஜாதி மதங்கள் அழிந்து போய்விடுமோ? என்று அஞ்சினர். முற்போக்காளர்களில் சிலர் உபவாசமிருந்தனர். வைதிக மார்க்கத்திலுள்ளவர்களும் கோயில் வாசலில் பட்டினி கிடந்தனர்.

பட்டினியாவது, கிட்டினியாவது உடம்பு இளைக்கக் காணோம். பகலில் உண்ணவில்லை என்றால் இரவில் கள்ளத்தனமாய் உணவு அருந்தியிருக்கவேண்டும் என்று ஒரு கட்சியினர் மற்றொரு சாரார் மீது அவதூறு தொடுக்கத் தொடங்கினர். ஆலயப்பிரவேசம் நடக்காதுபோனால் உயிரை விடுவோம் என்று ஒரு சாரார் கூறினர், ஆலயப்பிரவேசம் நடந்தால் எங்கள் சநாதனமான தர்மங்கள் அழிந்து போய்விடும். அவைகளை நிலை நாட்டுவதற்காக எங்கள் உயிர்களை மாய்த்துக்கொள்ளுவோம் என்று இன்னொரு சாரார் இயம்பினர்.

இறுதியில் ஆலயப் பிரவேசச் சட்டம் நிறைவேறி, அமுலுக்கும் வந்துவிட்டது. ஹரிஜனங்கள் கோயிலுக்குள் நுழைந்துவிட்டனர் என்ற செய்தி என் செவியில் தேனைப் பாயும்படி செய்துவிட்டது. ஆனால் ஒவ்வொரு கோயிலும் திறக்கப்படும் பொழுது வைதிகர்களின் மனத்தில் ஒரு பெருங்குழப்பமேற்படும்.

'எம்பிரானே, இது உனது திருவுள்ளமோ? எங்கள் பிரார்த்தனைகள் அனைத்தும் வீண்தானா?' என்று துயரக் கடலில் அவர்கள் ஆழ்வார்கள்.

அம்பிகாபுரத்து அமலனாதிப் பிரான் சந்நிதியும் ஹரிஜனங்களுக்குத் திறந்துவிடப் போகிறார்கள் என்ற செய்தியும் எங்கும் பரவ ஆரம்பித்துவிட்டது. அடியார்கள் கூட்டம் ஆழ்ந்த சிந்தனையில் தோய்ந்துவிட்டது.

'எம்பெருமானே, உன் அகண்ட சக்தியால் அவர்களைத் தடுக்கமாட்டாயா. நீதான் கண்கண்ட தெய்வமாயிற்றே. ஆகமவிதிகளெல்லாம் குலைந்தா போகவேண்டும்! ஹரிஜனங்கள் உள்ளே புகுந்தால் அவர்கள் கண்கள் அவிந்து போகாமற் போகுமோ?' என்று ஓலமிட்டுக் கண்ணீர் சொரிந்தனர் அவ்வடியார்கள். வைதிகர்கள் புரிந்த பிரார்த்தனைகள் யாவும் வீணாய்ப்போயின. ஹரிஜனங்கள் கோயிலுக்குள் நுழைந்துவிட்டனர். வைதிகர்கள் கோயிலுக்குப் போவதை நிறுத்திவிட்டனர். கோயிலில் முன்போல் வேதபாராயணம் நடக்கவில்லை. திருவிழாக்கள் ஓய்ந்துவிட்டன. எங்கே பார்த்தாலும் கோயிலின்மீது ஒரு சோக முகில் படர்ந்துவிட்டது.

கொட்டும் முழக்கமும் அவிந்துவிட்டன. மேளதாளங்கள் எங்கேயோ மாயமாய் மறைந்துவிட்டன. அமலனாதிப் பிரான் வெளியிலே புறப்பட்டாலும் அவரை வணங்க வைதிகர்கள் முன்வரவில்லை. கோயில் பொலிவிழந்து ஒரு துயர் வடிவாய்க் காட்சி அளித்ததில் வியப்பில்லை. வைதிகர்கள் மனத்தில் கோயிலுக்குப் போக முடியவில்லை என்ற ஏக்கம் குடிகொண்டுவிட்டது. ஹரிஜனத்தால் தீண்டப்பட்ட பிரானைத் தரிசிக்கக் கூடாதென்ற எண்ணமும் அவர்களிடத்தில் வேரூன்றத் தொடங்கிவிட்டது. கோயிலுக்குப் போகும் பழைய பழக்கமும், தரிசிக்கக் கூடாதென்ற எண்

ணமும் இடைவிடாது போர் புரிந்தன. இவற்றுள் எது அவர்களின் மன மன்றில் வெற்றிபெறுமோ? — ஒன்றும் விளங்க வில்லை. ஆச்சரியத்திலோர் ஆச்சரியம் வரதாச்சாரியார் சுவாமிகள் உபந்யாசத்தை நிறுத்திவிட்டார். அவரும் கோயிலுக்குப் போவதில்லை.

சில நாட்கள் கழிந்தன. இமயமலைச் சாரலில் பலநாள் தவம் புரிந்த ஒரு பெரியார் அம்பிகாபுரியைத் தமக்கோரிடமாகக் கொண்டுவிட்டார். அவர் முகத்தில் ஒரு தனி ஒளி வீசிற்று. பண்டை வேதகாலத்து ரிஷிகளின் முகத்தெளிவு இவரிடம் விளங்கிற்று. முன்பு அம்பிகாபுரிக் கோயிலுக்குப் போகும் ஜனங்கள் அவருடைய ஆசிரமத்தை நோக்கி இடையறாது போய்க்கொண்டிருந்தனர். மற்றவர்கள் வாசா கைங்கரியம் செய்தனர்; இவரோ ஆண்டவன் அருள் நெறியைப் பின்பற்றிப் பேரின்பச் சுனையில் தினமும் திளைத்தனர். ஆண்டவரின் திருவருளை எங்கும் கண்டார்; காண்கின்ற கடலெல்லாம் தானே யென்று உணர்ந்தார். காண்கின்ற விசும்பெல்லாம் தானே எனத் தேர்ந்தார். மழையின் இடையறாத ஒலியிலும், பறவைகளின் இன்னிசையிலும் பாடி வரும் நதிகளின் கானத்திலும் அவன் குழலோசை கேட்டார். மலரில் ஆண்டவனின் முறுவல் கண்டார், மின்னலில் அவன் திகிரியின் ஒளியைப் பார்த்தார். இடிமுழக்கத்தில் அவன் சங்கொலியைத் தேர்ந்தார். எல்லாம் வாசுதேவனாய்த் தோன்றின.

அவ்வூரிலுள்ள வைதிகப் பெரியோர்கள் வரதாச்சாரி சுவாமி முன்செல்ல அப்பெரியாரை நாடினார்கள். தாங்கள் கோயிலுக்குள் மீண்டும் போவதா? போகக்கூடாதா? என்ற கேள்வியை எழுப்பினர். அவர் தியானத்தில் ஆழ்ந்தார். அவரிடமிருந்து என்ன உபதேசம் வருமோ? என்று ஆவலோடு அவரையே ஒரு கட்டைபோல அசைவற்று நோக்கினேன். கணீர் என்று ஒரு குரல் எழுந்தது.

'பொய்ந்நின்ற ஞானமும், பொல்லா ஒழுக்கும் அழுக்குடம்பும் நீங்கள் அடையாவண்ணம் நான் பல பிறவிகளை எடுக்கின்றேன். நீங்கள் என்னைப் புறக்கணித்தாலும், என் தலையெழுத்து உங்கள் சாக்கடை மனத்தை எனக்கோர் கோயிலாக அமைக்காமலிருக்கமுடியவில்லை. எனக்காதீட்டு வந்துவிட்டது' என்ற குரல் எங்கும் ஒலித்தது.

அந்தக் குரல் சட்டென இறந்தது. ஒரு பெரிய அமைதி நிலவிற்று. அந்த விபுலானந்தர் கண்ணைத் திறந்தார்.

"ஆண்டவன் அருளைப் பெற்றீர்களா?" என்றார்.

"ஆம், தெரிந்துகொண்டோம். மகன் அன்னையை வேண்டாமென்றாலும் அவளையே நினைந்து உருகும் அன்னையைவிடப் பரிவு காட்டும் ஆண்டவன் செயலை இன்று தெரிந்துகொண்டோம். இத்தனை படித்தும் எனக்கு ஞானம் வரவில்லையே; என்னைக் காப்பாற்றவேண்டும்" என்று வரதாச்சாரியார் சுவாமி அந்த மஹானின் திருவடிகளில் விழும் சமயம், "அபசாரம்; யார் யாரை வணங்குவது" என்று அவர் ஓர் இன்னிசைக் குரலில் மொழிந்தார். அவர் உள்ளத்திலிருந்து ஒரு பாட்டும் வழிந்தோடிற்று.

"எவர் சிறியர் எவர் பெரியர்
எவர் உறவர் எவர் பகைஞர்
யாதும் உனையன்றி உண்டோ?
இகபரம் இரண்டினிலும் உயிரினுக்குயிராகி
எங்கும் நிறைகின்ற பொருளே"

இந்தப் பாட்டிற்குக் காடுகள் மலைகள் ஏரிகரை எல்லாம் எதிரொலி கொடுத்தன. விபுலானந்தர் முகத்தில் ஓர் அமானுஷ்யமான ஒளி வட்டமிட்டது. அவ்வொளி வட்டத்தின் வனப்பைப் பருகிக்கொண்டு அடியார் குழாம் நின்றது. ஓம் என்ற ஒலி படைப்பின் ஆழ்ந்த அடித்தளத்திலிருந்து ரீங்காரம் செய்துகொண்டுவந்தது. மீண்டும் சுவாமிகள் மௌனத்தில் ஆழ்ந்துவிட்டார்.

ஒரு புதுயுகம் பிறந்துவிட்டது. தொண்டர் எல்லோரும் வாரீர் என்ற புனிதச்சொல் எங்கும் எழுந்தது. வேதவொலி, முழவொலி, மத்தள ஒலி எல்லா ஒலிகளும் ஒன்றாய்க் கரைந்து விண்ணைப் பிளந்தன. கோயிலில் நிகழும் பெருந் திருவிழாக்கள். அடியார்கள் கண்களுக்கு ஒரு புதிய விருந்தை அளித்தன.

வரதாச்சாரியார்சுவாமியும், 'நான் அன்றே சொன்னேனே, சாதி போய்விடும் என்று' முழங்கினார். இவர் இப்படிச் சொல்லும் பொழுதெல்லாம் என் உதடுகளில் ஒரு முறுவல் அரும்பும். அம் முறுவலின் மர்மத்தை அவர் அறிவரோ!

# என் தீபாவளிக் கனவு

நா. கி. நாகராசன்

என் மனைவியிடமும், குழந்தையிடமும் விடைபெற்றுக்கொண்டு விமானத்தில் ஏறினேன். விமானத்தின் கதவு மூடப்பட்டது. இனி உலகத்திற்கும் எனக்கும் யாதொரு தொடர்புமில்லை. பேரிரைச்சலுடன் விமானம் புறப்பட்டுவிட்டது. புவியைவிட்டுக் கிளம்பியாயிற்று. பெரிய கூண்டுபோல் இருந்த அந்த விமானத்திற்குள் அடைபட்டுக் கிடந்த எனக்குப் போது போகவேண்டுமே. விமானியிடம் பேச்சுக் கொடுத்தேன். "இப்போது இந்த விமானம் எவ்வளவு வேகத்தில் போகிறது?" என்று கேட்டேன். அவர் பதில் சொல்லத் தொடங்கினர். "சந்திர மண்டலத்தை நோக்கி நமது விமானம் சென்றுகொண்டிருக்கிறது. புவியின் கவர்ச்சிச் சக்தியிலிருந்து ஒரு பொருள் விடுபடவேண்டுமானல் அதன் வேகம் செகண்டிற்கு எட்டு மைலாவது இருக்கவேண்டும். இப்போது நாம் செகண்டிற்குப் பத்து மைல் செல்கிறோம். இதே வேகத்தில் போனல் நாம் சுமார் ஏழு மணி நேரத்தில் சந்திரனை அடைந்துவிடலாம், ஆனல், சந்திரனை அடைவதற்கு முன்பாக நமது விமானத்தின் வேகத்தைச் சிறிது சிறிதாகக் குறைத்துக்கொண்டே வந்தால் தான் அதை அடைந்து விமானத்தை நிறுத்தமுடியும். ஆகையால் நமது பிரயாணத்திற்குச் சுமார் பத்து மணி நேரம் பிடிக்கும்" என்று அவர் ஏதோ சொல்லிக் கொண்டே வந்தார். என் மனம் தன்னிச்சைப்படி சுற்றத் தொடங்கியது. சந்திர மண்டலப் பிரயாணம்! நான் மீண்டும் உலகத்தை அடைந்தபின் என் மனைவி எவ்வளவு பெருமைப்படுவாள்! என் பிரயாண அனுபவத்திற்காகப் பத்திரிகை நிருபர்கள் போட்டி போட்டுக் கொண்டு வருவார்கள், என் நண்பர்களிடம் பேசும்போது சமயம்வாய்த்தபோதெல்லாம் "நான் சந்திரனில் இருந்தபோது..." என்று பெருமையடித்துக்கொள்ளலாம்!

இத்தகைய இன்ப நினைவுகளில் ஈடுபட்டுக் கிடக்கும் போது உடலே சுக்கு நூருனது போன்ற அதிர்ச்சியொன்று நேருகிறது. விமானமே வெடித்து எங்களைச் சிதறி விட்டதா என்ன ..... கண் விழித்துப் பார்த்தேன். நான் படுத்திருந்த சாய்வு நாற்காலியிலிருந்து கீழே விழுந்துகிடக்கிறேன். தீபாவளிக்காக வந்திருக்கும் என் மருமான் அருகே பட்டாசுக்களை ஜமாய்த்துக்கொண்டிருந்தான். "தீபாவளியும் அதுவுமா கங்கா ஸ்நானம் ஆனப்புறம் என்ன தூக்கம்? காபி ஆறிப் போறது, வந்து சாப்பிட்டுவிட்டுப் போங்கோ" என்று என் மனைவி அழைத்துக்கொண்டே வந்தாள்.

தீபாவளியன்று அதிகாலையில் எழுந்து எண்ணெய் தேய்த்துக் குளித்துவிட்டுத் தெருவில் மருமான் விடும் வாணங்கள் வானை நோக்கிப் பறக்கும் அழகை வியந்த வண்ணம் நாற்காலியில் சற்றுக் கண்ணயர்ந்ததன் விளைவே இக்கனவு! தீபாவளிக்கு ஊருக்குப் போனல் செலவாகுமே என அஞ்சி, சாக்கடை மணங் கமழும் சென்னைக் குழாய் நீரிலேயே "கங்கா ஸ்நானம்" செய்ய நேர்ந்த எனக்குச் சந்திர மண்டலப் பிரயாணம் போனது வேடிக்கைதான்.

கிழக்கு ஜெர்மனிக்கு வந்த ரகசிய சோவியத் தாரை விமானம்.



சில ஆண்டுகள் வரை சந்திர மண்டலப் பிரயாணம் வெறும் பகற்கனவாகத்தான் இருந்தது. ஆனால் அணுசக்தியைக் கட்டுப்படுத்தும் முறையை அறிந்தபின் இது நனவாகத் தக்க கனவாக மாறிவிட்டது. இன்னும் இருபது ஆண்டுகளுக்குள்ளேயே இது சாத்தியமாகும் என நம்புகிறார்கள். காற்றும் இல்லாத வான வெளியில் பறக்க நாம் தீபாவளி வாணத்தின் இயக்கத் தத்துவத்தையே பயன் படுத்த வேண்டி இருக்கும். வாணத்தின் இயக்கம் மிக அடிப்படையான பௌதிக விதியொன்றை ஒட்டி உள்ளது. 'ஒவ்வொரு வினைக்கும் அதற்குச் சமமான எதிர் வினையொன்றுண்டு' என்பதே இவ்விதி. நாம் சுவரைத் தள்ளினால் சுவரும் நம்மைப் பின்னால் தள்ளுவது போலிருக்கிறதல்லவா? படகில் உட்கார்ந்து கொண்டு படகைப் பின்நோக்கித் தள்ளினால் நீர் படகை முன்நோக்கித் தள்ளுகிறது. வாணத்தில் எரியும் வெடிமருந்து ஏராளமான வாயுக்களை வெளிவிடுகிறது, இவை வாணத்தின் கீழ்ப்புறத்தில் உள்ள தொளைகளின் வழியே விசையுடன் வெளியே பீச்சுகின்றன. இதனால் வாணம் மேலே உந்தப்படுகிறது. காற்றில்லாத சூனியத்திலும் இந்த இயக்கம் நடைபெறக்கூடும். வாணத்தின் இயக்கத்தைக் காற்று தடை செய்கிறது. ஆகையால் காற்றில்லாத இடத்தில் தான் இது இன்னும் திறமையாகப் பறக்கும். சாதாரண எரிபொருள்களை (Fuels) வான மண்டலப் பிரயாணத்திற்குப் பயனாக்கினால் அவை மிக அதிகமான அளவு தேவையாக இருக்கும். இதனால் வாணத்தின் கனம் மிக அதிகமாகிவிடும், ஆனால் அணு சக்தி தரும் பொருளோ சிறு அளவில் பிரம்மாண்டமான சக்தியைத் தரவல்லது ஆகையால் வான மண்டல வாணத்தில் இந்த எரிபொருளையே பயனாக்க முடியும்.

வான மண்டலத்தில் செல்லும் வாண விமானம் நடைமுறையில் இன்னும் சாத்தியமாகாமல் இருக்கலாம். ஆனால் மணிக்குச் சில ஆயிரம் மைல் வேகத்தில் செல்லும் வாணவெடி குண்டுகள் சென்ற போரின்போதே வழக்கத்திற்கு வந்துவிட்டன. இவற்றில் ஆக்ஸிஜன் வாயுவையும், சாராயத்தையும் கலந்து எரிக்கிறார்கள். மணிக்குச் சுமார் 2000 மைல்வேகத்தில் புவியிலிருந்து 80,000 அடி உயரத்தில் பறக்கும் வாண விமானம் ஒன்று 1947-ஆம் ஆண்டிலேயே அமெரிக்காவில் அமைக்கப்பட்டது. விமானிகளையும், ஆராய்ச்சியாளரையும் கொண்டு இது பறக்கும் ஆராய்ச்சிச் சாலையாக விளங்கும். வாண முறை இயக்கத்தில் கைதேர்ந்த ஜெர்மானிய அறிஞர் பலர் ருஷியாவில் வேலை செய்து வருகிறார்கள். ஆகையால் அந்நாட்டிலும் சிறந்த வாண விமானங்கள் கண்டு பிடிக்கப்பட்டிருக்கலாம். ஆனால் 'இரும்புத் திரைக்குள் நடக்கும் ஆராய்ச்சி நமக்கு எட்டி விடுமா?'

மிகக்கனமான விமானங்கள் கப்பல்களின் மேல் தளத்திலிருந்து மேலே செல்லத் தொடக்கத்தில் அதிகமான சக்தி தேவையாகிறது. ஆகையால் அவற்றில் வாணங்களைப் பொருத்தி அவை விமானத்தை ஆற்றலுடன் தள்ளிவிடுமாறு செய்கிறார்கள். வாணங்கள் இவ்வகையில் பல போர் விமானங்களில் பயனாகின்றன.

வாணமுறை இயக்கத்தைவிட அதிகமாகத் தற்கால விமானங்களில் வழங்கும் முறை இதனின்றும் சிறிது வேறானது. இது தாரைமுறை இயக்கம் (Jet Propulsion) எனப்படும். வாணத்தின் இயக்கத்

பிரிட்டிஷ் விமானப் படையைச் சேர்ந்த தாரை விமானங்கள் செங்குத்தாக மேலெழுகின்றன.



திற்குக் காற்றுத் தேவையில்லை என்றேன். அதிலுள்ள எரிபொருளைப் பற்றவைக்கத் தேவையான ஆக்ஸிஜன் வாணத்திலேயே இருக்கும். ஆனால் தாரை முறை இயக்கத்திலோ எரி பொருளை எரிக்கக் காற்றிலுள்ள ஆக்ஸிஜனை அது பெறவேண்டும். ஆகையால் தாரை முறை இயக்கம் காற்று மண்டலத்தில் மட்டுமே இயலும்.




இடி-தாரை எஞ்சின்

கா-காற்று உட்புகும் வழி, அ-உட்காரும் அறை, எ-எரிபொருள் அறை, வா-வாயுக்கள் வெளியேறும் அறை, மூ-மூடி, க-கருவிகள் உள்ள இடம், கு-தாரைக் குழல்.

தாரை முறை இயக்கம் இவ்வளவு வளர்ச்சியடைய ஆதிகாரணமாக இருந்தவர் ஆங்கில விமானப்படைஅதிகாரியான பிராங்க்விட்டில்(Whittle) என்பவர். தாரை முறையினால் விமானத்தை ஓட்டலாம் என்ற அமோகமான நம்பிக்கையொன்றையே ஆதாரமாகக் கொண்டு அரசாங்கத்தின் எதிர்ப்பையும், நண்பர்களது இகழ்ச்சியையும், தமது சோதனைகளில் பன்முறை நேர்ந்த தோல்விகளையும் பொருட்படுத்தாது இவர் ஆராய்ச்சி நடத்தி, 1941-ஆம் ஆண்டில் தாரை முறை இயக்கத்தினால் ஓடிய விமானத்தைப் பறக்கவைத்தார். அதன் பின்னர் நேச நாடுகளும் ஜெர்மனியும் போரில் ஆயிரக்கணக்கான தாரை விமானங்களைப் பயனாக்கின.

தாரை விமானத்தில் சாதாரண விமானத்தில் உள்ளதுபோல் செலுத்தி (Propeller) இல்லை. அதன் மூக்கில் உள்ள தொளைகளின் வழியே காற்று அதற்குள் புகுகிறது. இக்காற்று ஓர் 'பம்பி'ன் உதவியால் அழுத்தப்பட்டு எரி அறையை அடைகிறது. அங்கு இத்துடன் எரிபொருளைக் கலந்து பற்றவைக்கும் அமைப்பு உள்ளது. இப்போது தோன்றும் வாயுக்கள் உயர்ந்த வெப்பத்தில் இருக்கும். இவை ஒரு சக்கரத்தை நிமிடத்திற்குப் பல்லாயிர மைல் சுழற்றிவிட்டுக் கூறிய வாலின் வழியே வெளியேறுகின்றன, இவற்றின் உயர்ந்த அழுத்தத்தாலும், வாலின் வடிவத்தினாலும் இவை மிகுந்த விசையுடன் வெளியே செல்வதால் விமானத்தை முன்பக்கமாக உந்துகின்றன. சக்கரம் சுழன்று பம்பை இயக்குகிறது.

இதைத் தவிர இன்னும் இருவகைத் தாரை எஞ்சின்களும் உண்டு. அவற்றுள் ஒன்றில் விமானத்தின் முன்புறத்தில் ஒரு கதவு இருக்கும். அது திறந்து காற்றை உள்ளே வாங்கும், பின்னர் அது மூடிக்




தாரை எஞ்சின்

கா-காற்று உட்புகும் வழி, எ-எரி அறை, எ. உ-எரிபொருள் உள்ளே வர வழி, ச-சக்கரங்கள், மூ-வாலிலுள்ள மூக்கு.

கொண்டபின் காற்றுடன் எரிபொருள் கலக்கப்பட்டு எரிக்கப்படும். இப்போது தோன்றும் வாயுக்கள் வெளியேறியபின் மீண்டும் கதவு திறந்து காற்று உள்ளே வரும். இன்னொருவகைத் தாரை எஞ்சினில் முன் பக்கத்திலுள்ள திறந்த வாயின் வழியே காற்று உட்புகுந்து விமானம் செல்லும் வேகத்தினுலேயே அழுத்தப்பட்டு எரி அறையை அடைந்து எரி பொருளை எரிக்கும். இது இயங்கும் உறுப்புக்களே இல்லாததால் இது மிகத் திறமையுடன் வேலை செய்கிறது. அதிகமான வேகத்தில் செல்லும்போது இதன் திறமையும் அதிகமாகிறது. இவ்வகைத் தாரை எஞ்சின் இடி தாரை (Ramjet) என்று அழைக்கப்படுகிறது.

சாதாரண விமானத்தில் இல்லாத பல நலன்கள் தாரை விமானத்தில் உண்டு. உயர்ந்த வகைப் பெட்ரோலை மட்டுமே சாதாரண விமானத்தில் பயனுக்க முடியும். தாரை விமானத்திலோ மண்ணெண்ணெயைப் போன்ற மலிவான எரிபொருள்களையும் பயன்படுத்தலாம். சாதாரண விமானத்தில் இருப்பது போல் தாரை விமானத்தில் ஒரு செலுத்தி இல்லாததும் பெரு நன்மையாகும். ஏனெனில் வேகம் அதிகமாக ஆக அதன் திறமை குறைகிறது. விமானத்தின் வேகம் ஒளியின் வேகத்திற்குச் சமமாகும்போது செலுத்தியின் திறன் மேலும் குறைந்து விமானம் பறப்பதில் பல தொல்லைகள் நேர்கின்றன. இத்தொல்லை தாரை விமானத்தில் இல்லை, இதே காரணத்தால் தாரை விமானம் அதிகமான உயரத்திலும் திறமையுடன் பறக்கும். இயங்கும் உறுப்புக்கள் இல்லாத தாரை விமானத்தில் அதிர்ச்சியும், இரைச்சலும் இராது. சாதாரண விமானத்தைவிட இது இன்னும் செங்குத்தாக மேலேற முடியும். மணிக்கு 700-மைல் வேகத்தில் செல்லும் தாரை விமானங்கள் மிகப் பொதுவானவை.

சமீபத்தில் இந்தியாவுக்கு வந்த
'வால் நட்சத்திரம்.



தற்காலத்தில் எல்லா ஐரோப்பிய நாடுகளிலும் தாரை விமானங்களைப் பற்றிய ஆராய்ச்சி மும்முரமாக நடைபெற்று வருகிறது. இங்கிலாந்தில் 'வால் நட்சத்திரம்' என்னும் தாரை விமானம் இப்போது பிரயாணிகளை ஏற்றிச் செல்லப் பயன்படுகிறது. பொதுமக்களது விமானப் போக்குவரத்தில் பயனுன முதல் தாரை விமானம் இதுவே. இங்கிலாந்திலிருந்து இந்தியாவுக்கு இவ்விமானத்தால் போக்குவரத்து நடத்த ஒரு திட்டம் உள்ளது. போரின் போது ஜெர்மானியர் பயனுக்கிய தாரை விமானங்கள் மிகச் சிறந்தவையாய் இருந்தன. இவற்றின் நுட்பத்தை அறிந்த அறிஞர்களை ருஷியர்கள் தம் நாட்டுக்கு அழைத்துச் சென்றனர். ஆகையால் ருஷியாவில் இப்போது உலகிற் சிறந்த தாரை விமானங்கள் அமைக்கப் பெற்றுவருகின்றன. கொரியப் போரில் இரு புதுவகைத் தாரை விமானங்களை வடகொரியர் பயனுக்கினுர்கள். இவற்றின் வேகத்தை அமெரிக்கர்களால்சமாளிக்க முடியவில்லை. இரண்டுங்கெட்டானுக இருந்து வரும் தற்போதைய சர்வதேச நிலை நீடிக்கும் வரை இந்த விமானப்போட்டி இருந்துகொண்டு வரும். இதன் முடிவு என்ன என்பதைச் சிந்தித்துப் பார்க்கவும் மனம் கூசுகிறது. ஒன்றைமட்டும் உறுதியாக நம்பலாம். அடுத்த போரில் தாரை விமானம் கொடிய படைக்கலமாக விளங்கும்.

# புத்தக விமர்சனம்

## ஹிக்கின்பாதம்ஸ் வெளியீடுகள்

### "ரூஸ்வெல்ட்"

ஓர் ஆராய்ச்சி – (ஜான் குந்தர்)

தமிழாக்கம்: சி. சு. செல்லப்பா

பூரணமான வாழ்க்கைச் சரித்திரம் எழுதுவது என்பது ஒரு சிரமமான காரியமாகும். அதுவும் நான்கு தடவைகள் அமெரிக்க ஜனாதிபதியாக இருந்த ஒருவரைப்பற்றிப் புதிய பல தகவல்களுடன் எழுதியது ஜான்குந்தரேயாகும். பல மாத ஆராய்ச்சிக்குப் பிறகு எழுதப்பட்ட இப்புத்தகம் ரூஸ்வெல்ட்டின் வாழ்க்கை அம்சங்களை விஸ்தாரமாகவும், தெளிவாகவும் எடுத்துக்கூறி, ரூஸ்வெல்ட்—ஒரு ஜனாதிபதி – தனி மனிதன் – ஆகிய இரு அம்சங்களும் கூடிய தனி மனிதராக உருவாக்கியிருக்கிறது. ஏன்? தனி மனிதன் உலகில் சாதித்து விட்டுப்போன ஒரு வேலையை வைத்து ஒருவனை மதிப்பிடுவதானால் ரூஸ்வெல்ட் உன்னதமாக நிற்கிறார் என்றே சொல்ல வேண்டும். ரூஸ்வெல்ட்டின் பிரதான குணங்கள், குறைகள், மற்றும் சுபாவங்களையும் மனப்பான்மைகளையும் ஒப்பிட்டுப் பார்க்கப் போனால், தனி மனிதராகவே ஜன நாயகத்தைப் பாதுகாத்தவர் என்றும் முதன் முதலாக அமெரிக்காவுக்கு உலகத் தலைமைப் பதவியை அளித்தார் என்றும் சொல்ல முடியும். மொழி பெயர்ப்பும் நன்றாகவே இருக்கிறது.

## எல்லோரும் ஓர் குலம்

எலியநார் ரூஸ்வெல்ட்

துணை ஆசிரியர் ஹெலன் பெரிஸ்

தமிழாக்கம் கே. எஸ். ஜம்புநாதன்

மனித சமுதாயம் உயரவும் எல்லோரும் ஓர் குலமாக வாழவும் வேண்டுமென்ற எண்ணம் இப்பொழுதுதான் பல நாடுகளுக்குத் தோன்றியுள்ளது. இதில் முதன்மை ஸ்தானம் வகிக்கின்றன பல நாடுகள். ஐக்ய நாடுகளின் சபை எதிர் கால ப்ரஜைகளான குழந்தைகளின் முன்னேற்றத்துக்காகவும் ஒற்றுமைக்காகவும் பல்வேறு ஸ்தாபனங்களின் மூலம் செய்து வரும் வேலைகளைப் பற்றி அற்புதமாயும்தெளிவாகவும் சுருக்கமாகவும் கதையாகச் சொல்லிச் சித்திரிக்கிறது இப்புத்தகம். நிற இன பேதமின்றி எல்லா நாட்டுக் குழந்தைகளும் நல்ல உணவும் வாழ்க்கை வசதியும் பெறும் பொருட்டு ஐ. நா. சபை பல பகுதிகளைக்கொண்டு பேர் உதவி செய்து வருகிறது; ஐ. நா. அகதிகள் கஷ்ட நிவாரண குடியேற்றச் சபை, சர்வ தேசக் குழந்தைகள் சகாய நிதி (Unicef) உணவு, விவசாய ஸ்தாபனம் (F. A. O.) சர்வதேச கல்வி விக்ஞான, கலாசார ஸ்தாபனம் (Unesco) என்ற பல விசேஷ பிரிவுகள் பிரிக்கப்பட்டு அதிக சிரத்தையுடன் வேலை நடந்து வருகிறது. இது எப்படி நடை முறையில் கொண்டு வரப்படுகிறது என்பதை ரேடியோ செய்தி, கட்டுரை, பேட்டி, ஊழியர்களின் குறிப்புகள் என்ற பல தகவல்கள், பொறுக்கி எடுக்கப்பட்ட சில முக்ய நிகழ்ச்சிகளை இப்புத்தகம் கொண்டுள்ளது. தமிழில் மொழி பெயர்க்கப்பட்டுள்ள புத்தகங்களுள் வரவேற்கத் தகுந்த ஒரு புத்தகம்.

## "ஐக்ய நாட்டு ஸ்தாபனம்"

வேலை செய்யும் முறை —டாம்கால்ட்

மொழி பெயர்த்தவர் – எம். எஸ். கமலா,

ஐக்கிய நாட்டு ஸ்தாபனம் என்று ஒரு ஸ்தாபனம் இருந்து வருகிறது என்பது யாவரும் அறிந்த விஷயம். ஆனால் அது ஏன், எதற்காக ஸ்தாபிக்கப்பட்டது, அதனுடைய பல பாகங்கள் யாவை, அது எப்படி தன் வேலையைச் செய்கிறது; நாம் அதற்கு என்ன செய்யமுடியும் என்பன போன்ற பல விஷயங்களை அறிய வேண்டியது மிக முக்கியம். அபாயம் தோன்றும் பொழுது அது என்ன செய்கிறது, சமாதானத்தை நிலைநிறுத்த என்ன வழிகள் செய்கிறது என்ற பல விஷயங்களைத் தெளிவாக விளக்கியிருக்கிறது இந்நூல்.

## துணிச்சலான புதிய திட்டம்.

வில்லார்டு, ஆர். எஸ். பி.

தமிழாக்கம்: பா. லோகநாதன்.

தொழில் வளத்தில் பின்தங்கியிருக்கும் பிரதேசங்கள் முன்னேற்றமடைவதற்கான தூண்டுகோலாக அமெரிக்க ஜனாதிபதி ட்ரூமன் அறிவித்த நான்காம் அம்சத்தையே இப்புத்தகம் துணிச்சலான புதிய திட்டமென அழைக்கிறது. அமெரிக்க வர்த்தகரின் சொந்த நலனை உலக சமாதானத்திற்கும் சுபிட்சத்திற்கும் பயன் படுத்திக்கொள்ளலாம் என்பதில்தான் இத்திட்டம் உதித்திருக்கிறது. இத்திட்டத்தின் மூலகாரணமென்ன, இதினின்றும் விலகி நிற்பது சாத்யமா, இதனால் பட்டினிச் சாவைத் தவிர்க்க முடியுமா போன்ற பல [illegible]ர்களை இப்புத்தகம் விளக்குகிறது. இன்[illegible]றய ச[illegible]தாயத்தில் யுத்தத்தையும் ஏதேச்சதிகாரத்தையும் [illegible]விர்க்க நான்காம் அம்சம் போன்ற ஒரு கொள்[illegible] [illegible] மனப்பாங்கை இந்நூல் விவரிக்கிறது.

பாடுபட்டால் சமாதானம் கிட்டுவது உறுதி.

பால் ஜி. ஹாப்மன்

சுதந்திரத்தோடு சமாதானம் அடைய என்ன வழி என்பதை இந்நூல் ஆசிரியர் ஹாப்மன் குறிப்பிடுகிறார். பெஞ்சமின் பிராங்க்லின் அன்றைக்குச் சொன்னது போல் "நாம் எல்லோரும் ஒன்றாகத் தொங்கவேண்டும்; இல்லையேல், நிச்சயமாக ஒவ்வொருவரும் தனித்தனியாகத் தொங்குவோம்" என்று ஆகிவிடும் என்பதை ஹாப்மன் எச்சரிக்கிறார். மூன்றாம் உலக யுத்தம் ஒன்று மூளாமல் இருக்கவும், மக்கள் சம்மதத்துடன் ஆட்சி நடத்தும் மக்களுடைய உரிமைகளைப் பாதுகாக்கவும், சுதந்திரத்தோடு சமாதானம் என்ற நிலைமை ஏற்பட அடிகோலவும் ஒரு நாடானது படைவலிமையிலும் பொருளாதார முனையிலும் அரசியல் முனையிலும் மக்கள் மனநிலை யென்னும் முனையிலும் தூங்காமல்முன்னேற வேண்டியதன் அவசியத்தைத் தெளிவுபடுத்திக் கூறுகிறார்.

அமெரிக்காவிலுள்ள

## முதலாளித்துவம்-வர்க்கமற்ற சமூகம்.

ஆசிரியர்: பிரடரிக்மார்ட்டின் ஸ்டெர்ன்

தமிழாக்கம்: கே. எஸ். ஜம்புநாதன்

"வாழ்க்கையில் சுபிட்சமும் அந்தஸ்தும் ஏற்பட வர்க்க பேதமில்லாச் சமுதாயம் வேண்டும். இதைப் பெற முதலாளித்துவம் அவசியம் அமெரிக்க முதலாளித்துவம் ஜனநாயக முதலாளித்துவமாகும். அது புரட்சியிலும் (மாறுதலிலும்) வளர்ச்சியிலும்தான் உருவாகியுள்ளது உலகில் ஒரு முதலாளிகூட இல்லாமல் செய்யும் வரை வர்க்கப் போராட்டம் நடக்கும் என்று லெனினும் ஸ்டாலினும் சொன்னார்கள். இதற்கு இரண்டு வழிகளுண்டு. ஒன்று வறுமை, அடிமைத்தனம் இவைகளை ஒழித்து வாழ்க்கை வசதிகளைக் கொடுத்து ஏழை மக்களை உயர்த்துவது. இல்லாவிட்டால், பணக்காரர்களைப் பறிமுதல் செய்து, தரைமட்டமாக்கி விடுவது ,மக்களுடைய சுதந்திரத்தையும் உரிமையையும் பறித்துவிட்டு எல்லோரையும் சமநிலையாக்குவது அமெரிக்கா இதன் முன்வழியை அடைய முயலுகிறது.

இப்படி வர்க்கமற்ற சமூகமாகிய அமெரிக்க "ஜனநாயக முதலாளித்துவம்" சமாதன முறையில் எல்லாரும் ஐக்கிய பாவத்துடன் பழகி எப்படி வாழச் சந்தர்ப்பமளிக்கிறது என்பதைக் கடிதங்களாலாகிய இந்நூலால் இவ்வாசிரியர் தெளிவாக்குகிறார்.

## மக்கள் நடத்தும் அரசாங்கம்

அரசாங்க இலாகா வெளியீடு.

அமெரிக்க நிர்வாக முறையில், அரசியலமைப்புத்தான் நாட்டின் ஜீவாதாரமான சட்டம். எல்லோராலும் புகழப்பட்ட இவ்வமைப்பு பல நூற்றாண்டுகளுக்குமுன் ஏற்பட்டாலும் அடுத்துவரும் நூற்றாண்டுகளின் அபிவிருத்திகளை ஊகித்தறிந்து, பல விசேஷ மாறுதல்கள் செய்ய வழிகளையும் உடையதாக அங்கீகரிக்கப்பட்டுப் பயனுள்ளதாக இருக்கிறது. அப்படிப்பட்ட அரசியலமைப்பின் விசேஷப் பகுதிகளையும் ஷரத்துகளையும் பின் ஏற்பட்ட திருத்தங்களோடு கூடியதாக இப்புத்தகம் அமைந்துள்ளது.

## அமெரிக்கா

ஆசிரியர்: ஸ்டீபென்வின்சென்ட்பெநே

தமிழாக்கம்: வை. அ. பொன்னையா

(யு. எஸ். இன்பர்மேஷன் ஸர்விஸாரால்)

விலை ரூ. 0—12—0

செல்வமும் செழிப்பும், தொழில்வளமிக்கதும், உணவுக்களஞ்சியமாகவும், பொருளாதார முன்னேற்றத்தில் தலைமை தாங்கியும் வரும் அமெரிக்காவைப்பற்றிய உண்மைகளை அறிய யாவரும் விரும்புவர். உலகிலேயே ஒரு உயிருள்ள சக்தியாக இன்று விளங்கக் காரணம் என்ன, அந்நாடு எப்படி, எதற்காக ஏற்பட்டது, எப்படி வளர்ந்து எப்படி இந்த நிலையை அடைந்தது போன்ற பல விஷயங்கள் அமெரிக்க சரித்திரரூபமாக, 200 பக்கங்களுடைய இப் புத்தகத்தில் எழுதப்பட்டிருக்கின்றன.

---

## அணுவின் கதை

பெ. நா. அப்புஸ்வாமி

ஜே. பி. மாணிக்கம்

விலை ரூ. 5—0—0

பதிப்பாளர்: பாரத்யுனிவர்ஸிடி பப்ளிகேஷன்ஸ் மதராஸ்-20

கிடைக்குமிடம்: கலைமகள் காரியாலயம் மதராஸ்-4

அணுவின் அளப்பரிய சக்தியைக் கதைரூபமாகப் பொதுமக்களுக்கு விளங்கும் முறையில் எழுதப்பட்ட இந்நூல் சென்னைச் சர்வகலாசாலைப் பரிசை வாங்கியதில் ஆச்சரியமில்லை. ஏனெனில் இவ்வாசியருள் ஒருவர் பௌதிக மேதாவியாகவும் மற்றொருவர் தமிழில் மேதாவியாகவுமாக இருப்பதே. மிகவும் நுட்பமான தத்துவங்களையும், கோட்பாடுகளையும் கருவிகளையும் ஆதாரமாகக் கொண்ட அணுவின் கதையைக் கூடியமட்டும் தெளிவாக எடுத்துக்கூற இவ்வாசிரியர்கள் சித்திரப் படங்களையும் விளக்கங்களையும் அநேக வருணனைகளுடனும் உவமைகளுடனும் உபயோகித்திருக்கின்றனர். சாதாரண மனிதனுக்கும் ஊக்கமளிக்கும் வகையில் படிக்க எளிதாக இருக்கும் பொருட்டு வேண்டிய இடங்களில் முன் விஷயங்

கள் ஞாபகப்படுத்தப்படுகின்றன. ஏராளமாகப் படங்களிருப்பதால் அவைகளை எண்ணிட்டு ஒரு அட்டவணை தயாரித்திருந்தால் மிக நன்ருக விருக்கும். பன்னிரண்டு அத்தியாயங்களை உடைய இந்நூல் தமிழுலகுக்கே விஞ்ஞானத் துறையில் வழிகாட்டியாக அமையும் என்பது திண்ணம்.

## திருக்குறள் உரைவளம் காமத்துப்பால்

தொகுப்பாசிரியர்: வித்வான் திரு. ச. தண்டபாணி தேசிகர்

(தருமபுர ஆதீனம் அவர்கள் ஆணையின்வண்ணம் வெளிவருவது) விலை ரூ. 6—0—0

இது, ஆதீன வெளியீடுகளுள் திருக்குறளில் மூன்ருவது தொடரான காமத்துப்பால் ஆகும். இப் பதிப்பில் மற்ற இருபால்களைப் போல் ஐவர் உரைகளும், மற்றும் மேற்கோள் பகுதி, ஒப்புமைப்பகுதி, முதுமொழி வெண்பாக்கள் ஆகியவையும் ஆங்காங்கே அழகு செய்கின்றன. ஆசிரியரது குறிப்பும் தேவையான இடங்களில் சேர்க்கப்பட்டுள்ளது. ஒவ்வொரு அதிகாரத் தொடக்கத்திலும் தொகுப்புரையும் எழுதப்பட்டுள்ளது. 135 பக்கங்களுடைய திருக்குறள் ஆராய்ச்சி என்ற தலைப்பில் திருக்குறள் மணியைப் பல கோணங்களிலிருந்து பார்த்து ஆசிரியரது ஆராய்ச்சிகளை வெளியிட்டதிலிருந்தே நாம் இப்பெருமுயற்சி செய்து தொகுத்த இந் நூலாசிரியரைப் பாராட்டுகிருேம் என்று சொல்லவும் வேண்டுமோ?

## கிடைக்கப்பெற்ருேம்

படப் புத்தகங்களைப் பார்த்து அவைகளிடமிருந்து விஷயங்களை அறிந்துகொள்வதுபோலப் புத்தகங்களை எவ்வளவுதடவை படித்தாலும் அறியமுடியாது. அதுவும் குழந்தைகளுக்குப் பட உதவியினுல் விஷயங்களைக் கற்றுக்கொடுப்பது மிகச் சிறந்த முறையாகும். மேல் நாடுகளில் இம்மாதிரிப் படப் புத்தகங்கள் அதிகம் வரவேற்கப்படுகின்றன. முதலில் இங்கிலாந்தில் பெங்குவின் புக்ஸ் லிமிடெட் என்னும் கம்பெனி வெளியிட்ட பப்பின் படப் புத்தகங்களில் சிலவற்றைத் தேர்ந்தெடுத்து இப் பதிப்பகத்தார் மொழிபெயர்த்து வெளியிட்டிருக்கிருர்கள். பெ. நா. அப்புஸ்வாமியால் இப் புத்தகங்கள் தமிழில் மொழி பெயர்க்கப்பட்டிருக்கின்றன. குழந்தைகளுக்கு உபயோகமுள்ள புத்தகங்கள்.

(1) இந்திய நாட்டு விலங்குகள்.

(2) சைனுவின் கதை.

(3) மிங்கின் கதை.

ஒவ்வொன்றுக்கும் விலை அணு 12.

கிடைக்குமிடம்:—

ஆர்க்ஸ்பர்ட் யுனிவர்ஸிட்டி பிரஸ், பம்பாய், மதராஸ், கல்கத்தா.

## தருமபுர ஆதீன வெளியீடுகள்

வெளியீடு எண் 270—திருநனிபள்ளித் திருப் பதிகங்கள்.

,, ,, 275—திருவலம்புரத் திருப் பதிகங்கள்.

,, ,, 277—திருத்தலைச்சங்காட்டுத் திருப்பதிகம்.

## ஸ்ரீ சங்கர, ராமாநுஜ, மத்வ, தேசிக சரித்திரங்கள் கீதோபதேசத்துடன்:

எழுதியவர்:– 'பக்தி' பத்திரிகை வெளியிடும் நே. ஈ. வேங்கடேச சர்மா.

கார்யாலயம்:– நே. ஈ. துரைசாமி ஐயங்கார், தக்ஷிணதேச க்ரந்தாலயம், கம்பரசம்பேட்டை போஸ்ட், – திருச்சி மார்க்கம்

விலை அணு 5.

## ராமுவும் நானும்.

எழுதியவர்: நா. கி. நாகராசன் M. A.,

இந்நூலாசிரியர் நாகராசனைப் பற்றி எதுவும் கூறத் தேவையில்லை. ஏனெனில், அவர் தமிழுலகுக்கு விஞ்ஞானத் துறையில் பல கட்டுரைகளைக் கதை ரூபமாக வெளியிட்டிருப்பவர். வருங்கால மக்களான சிறுவர்களுக்குக் கதைப் புத்தகங்களைத் தவிர வேறு எதுவுமே பிடிக்காத வகையில் மற்றப்பொது அறிவு புத்தகங்கள் அமைந்துள்ளன. மற்றும் கதை வடிவிலான கட்டுரைகளையடக்கிய புத்தகங்கள் எதுவாஞலும் அவை சிறுவர்கள் மனதில் நன்கு பதியும். இம்மாதிரி படிப்பினை ஊட்டுவதே சிறந்த முறை என அறிவாளிகள் எண்ணுகின்றனர். ஆகவே கதை வடிவில் உள்ள பொது அறிவை வளர்க்கும் "ராமுவும் நானும்" போன்ற புத்தகங்கள் யாவராலும் வரவேற்கப் படும் என்பதில் சந்தேகமில்லை.

## "ஆடல் பாடல்"

(நான்கு அங்கங்களில் ஒரு நாடகம்.)

நாடகாசிரியர்: கொடுமுடி ராஜகோபாலன்.

பிரசுரிப்பாளர்: நேஷனல் ரினேஸான்ஸ் சென்டர், திருவல்லிக்கேணி, சென்னை–5.

விலை ரூ. 1—4—0.

"எந்த நாடகத்திலும் மக்களுக்கு ஒரு நேரான செய்தி" இருக்க வேண்டும்; இந்தச் செய்தியும் வாழ்வின் இன்ப துன்ப உணர்ச்சிகளின் மத்தியிலேயே கம்பீரமாக ஒலிக்க வேண்டும் என்று பேராசிரியர் பெர்னுர்ட்ஷா நாடக லட்சியம் பற்றிக் கூறியிருக்கிருர். இந்நாடகாசிரியரின் முதல் நாடகமான "ஆடல் பாடல்" இம்முயற்சியில் ஷாவின் திருஷ்டியை ஒத்திருக்கிறது என்றே கூற வேண்டும். சினிமா பாணியில்லாத, ஜீவன் ததும்பும் முறையில் ஆங்காங்கே கருத்துக்கள் கொண்ட சம்பாஷணைகள் உள்ளன. தகுந்த கலைஞர்களைக்கொண்டு இந்நாடகத்தை நடித்தால் அது வெற்றியாக முடியும் என்பது நிச்சயம்,

# தீபாவளி

கிருஷ்ணன் பாலா

அந்தி மயங்கும் அழகிய வேளையில்
சுந்தர மாகச் செக்கர் வானம்
அகிலம் எங்கணும் அழகொளி பரப்ப
மகிதலம் யாவும் மலர்ச்சி கொண்டு
அழகெனும் ஆடையை அமைவுற அணிந்து,
செழிப்புடன் ஒளிர்ந்து சிறக்கும் வேளையில்
ஆங்கோர் இடத்தில் அமர்ந்து நானும்
பாங்காய்ச் சிந்தனைப் பரியில் ஏறினேன்.
கண்கள் கண்டன களிப்புடன் இயற்கையின்
வண்ண அழகின் விதத்தொடு மாண்பையும்.
உடல்தான் உணர்ந்தது உயர்ந்தநல் தென்றலை:
மடல்விரிந் துள்ள மலர்களின் நறுமணம்
வெண்ணொளி பரப்பி வெள்ளித் தட்டம்போல்
தண்மையா யொளிரும் தகைசால் நிலவு,
இவைபோ லுள்ள இயற்கையின் எழிலைச்
சுவைத்தவை எனது வெற்றுப் புலன்களே.
உவந்திவ் வனப்பை உலகம் போற்றினும்,
இவற்றிலென் உள்ளம் இசைய வில்லை.
மென்மையாய்த் தவழ்ந்து மலர்களின் மணத்தை
இன்பமாய் வீசி இனிதே செல்லும்
தென்றற் காற்று தப்பா தெனக்கு
உன்றன் அணைப்பை உணர்த்திச் செல்லும்,
ஓங்கிய மலைமேல் ஒய்யார மாகப்
பாங்குடன் வீழ்ந்து படரும் மேகம்
அன்றொரு நாளெனை அணைத்திடும் போதுன்

முன்றுகில் என்மேல் வீழ்ந்ததை உணர்த்தும்.
விண்மீன் ஒளிஉன் விரிந்த கண்களை
உணர்த்திய தென்று உரைக்கவா வேண்டும் ?
இங்ஙன மெங்கணும் இருந்த காட்சியில்
மங்கல மாயுன் மலருருக் கண்டேன்.
மந்திர மென்னவோ மாயம் ஏதோ,
தந்திரம் தானோ துணிந்து செய்தாய்:
எப்பொருள் காணினும் எதனை நோக்கினும்
அப்பொருள் தன்னில், அகிலம் முழுதுமே
நின்னொளி வதனம் நிலவக் காண்கிறேன்,
புன்னகை புரிந்தே பரிவாய் வதைக்கிறாய்.
மகிழ்ச்சி எங்ஙனம் மனதில் தங்கும்
நெகிழ்ச்சி யுடன்மனம் நலியப் பிரிவினால்.
ஆயினும் உனது ஆசைக் கண்களில்
நயந்து நிற்கும் காதற் கனிவு
இதய கீதம் இனிதாய் இசைத்து,
பதமாக் கியதென் பிரிவுத் துயரை.
சுற்றிலும் பார்த்தேன் சிரிப்புடன் யாவரும்
பற்றுடன் தீபங்கள் பலபல ஏற்றித்
***தீபா*** ***வளி***தனைக் கொண்டாடு கின்றனர்,
தீப ஜோதியில் நின்முகம் கண்டேன்.
மங்கின மகிழ்ச்சி மீட்டும் எழுந்தது
பங்கு கொண்டேன் பண்டிகைக் களிப்பில்.
மின்னொளி நினது இன்புறு நினைவால்
மன்னும் ***தீபா*** ***வளி***தினம்,
***தீப*** ***ஆவளி*** திகழ்ந்த தென்மனத்தே.

# பெய்யெனப் பெய்யும் மழை

ஜி. எஸ். மணி




மாலை ஐந்து மணிக்கு மேலாகியும் வெய்யிலின் கொடுமை கொஞ்சமும் குறையவில்லை.

பகல் பூராவும் நெருப்பு மழையாகவே பொழிந்து தள்ளிய வானம் மாலையிலும் குளிராமல் காய்ந்துகொண்டு தானிருந்தது. எந்தத்தேவதையின் கோபாவேசமோ அல்லது யாருடைய சாபத்தீடோ—தெரியாது, உலகமே அந்தப் பிரளய கால ஜ்வாலையில் சிக்கி வெளியேற வழி தெரியாமல் தவித்துக் கொண்டுதானிருந்தது. சகல ஜீவராசிகளும் மழைக்காக ஏங்கித் தவம் கிடந்தன.

'வானம் பொய்க்குமோ' என்று பெருமையுடன் குறிப்பிடப்பட்ட காலம் தான் பொய்த்து விட்டதோ? வானம் பொய்த்தே விட்டது; தற்காலிகமாக அல்ல! ஐந்தாறு ஆண்டுகளாகவே தொடர்ந்து பருவ மழை பொய்த்துக்கொண்டே வந்தது. ஓரிடத்திலாவது ஒரு பொட்டு மழை இறங்கவில்லை. வானம் வறண்டதன் பயனாகப் பூமி வறண்டது; பூமியை அண்டி வாழும் மனித சமுதாயத்திடமும் பாளம் – பாளமாக வெடிப்பு ஏற்பட்டது. ஆயினும் மனிதன் நம்பிக்கையை அறவே இழந்துவிடாமல், 'வானம் பொய்க்காது' என்று ஆவலுடன் எதிர் நோக்கியதே அதிசயம்.

"செயற்கை மழைக்காகப் பெருமுயற்சி – அக்டோபர் மாதத்தில் பரீட்சை நடத்தப்படுமாம்" என்று அன்றைய தினசரியில் வந்த செய்தியொன்றை நண்பர் ஒருவர் உரத்த குரலில் படித்தார்.

அதைக் கேட்டுக்கொண்டிருந்த மற்றவர்கள் இன்ப உணர்வையும் பெறவில்லை; சலித்துக் கொள்ளவுமில்லை. அந்தச் செய்தியைப் படித்துக் காட்டிய நண்பரும் தம் சகாக்களிடம் ஏதும் எதிரொலியை எதிர்பாராதவரைப் போலவே மீண்டும் மௌனமாகி, பேப்பரின் மற்றப் பத்திகளில் ஆழ்ந்துவிட்டார்.

நான்கைந்து நண்பர்கள் அடங்கிய அச்சிறு கூட்டம் பிரும்மாண்டமான ஏரி கரையிலே பொழுது போக்குக்காக அமர்ந்துகொண்டிருந்தது. ஒருவர் கையில் பேப்பரைப் பிடித்துக் கொண்டிருந்தார். இன்னொருவர் மண் தரையில் துண்டை விரித்து அதன் மீது படுத்தபடி அருகில் கிடந்த சின்னஞ்சிறு கற்களையும், மண் கட்டி

களையும் எடுத்து வீசி வீசி எறிந்து விளையாடிக் கொண்டிருந்தார்; வேறொருவர் வான முகட்டை உற்றுக் கவனித்தபடி ஏதோ யோசனையில் ஆழ்ந்திருந்தார்' மற்றொருவர் ஏரியின் நாற்புறமும் மலைத்து நின்று கொண்டிருந்த மலைச்சிகரங்களை வெறித்து நோக்கிக் கொண்டிருந்தார்.

மூன்று மைல்கள் விஸ்தீர்ணத்துக்குப் பரவிக் கிடந்த அந்த ஏரியும் பொட்டுத் தண்ணீரின்றி, பெரும் பாலைவனமாகவே காட்சி யளித்துக் கொண்டிருந்தது. அங்கங்கே வளர்ந்து தீய்ந்து கிடந்த புல் வெளியில் சில சிறுவர்கள் கூச்ச விட்டபடி ஏதோ விளையாடிக் கொண்டிருந்தனர். வறட்சி காரணமாக ஏரியில் காணப்பட்ட பெரிய பெரிய வெடிப்புக்களுக்கு எரி மலையின் குரூரம் மிகுந்த வாயை உதாரணமாகச் சொல்லலாம்.

"இந்த ஏரி பெருகி, கரை துளும்ப ஜலம்பொங்கி நின்றால் எவ்வளவு நன்றாக இருக்கும்!" என்று திடீரென்று சொல்லி அங்கு நிலவிய மௌனத்தைக் கலைத்தார் அச்சிறு கூட்டத்திலிருந்த ஒருவர்.

"கற்பனையில் பார்க்கும் போது வெகு ரம்யமான காட்சியாகத்தானிருக்கிறது, இனி உன்னைப் போன்ற கதாசிரியர்கள் கற்பனையில் காட்டும் மழைக் காட்சிகளைத்தான் நாங்களும் கண்டு விட்டுத் திருப்தி அடைய வேண்டும் போலிருக்கிறது!" என்று பதில் சொல்லிச் சிரித்தார் இன்னொருவர்.

"தெய்வம் தொழாஅள் கொழுநற்றொழுதெழுவாள் – பெய்யெனப் பெய்யும் மழை" என்ற வள்ளுவர் வாக்கையும் பொய்யாக்கி விட்டார்களே தற்காலத்திய மனைவிகள்.! கொண்ட கணவனைத் தொழுதெழும் ஓர் உண்மை மனைவிக்குமா இப்போது பஞ்சமாகிவிட்டது?" என்று அங்கலாய்த்துக்கொண்டார் மூன்றாமவர்.

திறந்துவிடப்பட்ட தண்ணீர் தேக்கத்தைப் போலப் பேச்சுப் பற்றிக்கொண்டு வேகமாகப் பாயத் தொடங்கிவிட்டது.

"மழை காணாது மடியும் மனதுக்கு–உற்ற துணை கற்பனை காட்டும் கதாசிரியனே–என்று புதிய குரலைக் கிளப்பிவிடலாம் போலிருக்கிறதே!"

"கற்பனையிலேயே மனிதன் வாழ முடியுமென்றால் நீங்கள் சொல்வது சரிதான்; ஆனால் நடப்பு அப்படியல்லவே?"

"எதுவும் நடக்குமென்ற நம்பிக்கையிலேயே தான் வாழ்கிறோம்; அந்தப்படி பார்த்தால்–அந்த நம்பிக்கையே ஒரு கற்பனைதானே?"

"அந்த நம்பிக்கை தவறானது; வருண ஜபம் பண்ணுவதாகச் சொல்லிக்கொண்டு 'ஹே வருணா' 'ஹே இந்திரா'–என்று கையைத் தூக்கிக்கொண்டு கதறிவிட்டால் மட்டும் மழை வந்துவிடுமா? மழைக்கு அதிபதியான வருணனைக நவீன விஞ்ஞானியொருவனை உருவாக்கவேண்டும் ஸார்! அப்போதுதான் வானம் கண் திறக்கும்; வள்ளுவர் சொன்னதும் ஒரு விதத்தில் உண்மையாகும்; அதாவது: விஞ்ஞானி 'பெய்' என்றால் பொழிந்து தள்ளவேண்டும்; 'போதும்' என்று சொன்னதும் 'பொட்'டும் விழாமல் நிற்கவேண்டும்."

"நீங்கள் சொல்வது சரிதான்; ஆனால் ஒரு முக்கியமான விஷயத்தை மறந்துவிட்டீர்கள்" என்று புதுக்குரல் ஒன்று பேசியதும் அனைவரும் ஒரு கணம் திகைத்துவிட்டார்கள்.

பத்திரிகைப் பித்தர் தலைநிமிர்ந்து புதிதாக வந்து சேர்ந்துகொண்டவரைக் கண்ணுற்றதும் முகம் மலர்ந்து — "ஓ, நீங்களா! வரவேண்டும்! வரவேண்டும்! இப்படி உட்கார்ந்து பேசலாமே?" என்று கனிந்து அழைத்தார்.

புதியவர் ஒரு புறம் அமர்ந்து புன்னகை பூத்தார்; பின்னர், "குருட்டு நம்பிக்கை கூடாது; விஞ்ஞானம் வளர வேண்டும் என்று நீங்கள் சொல்வதை நானும் ஒப்புக்கொள்கிறேன். ஆனால் – விஞ்ஞானம் மட்டும் மனிதனை ஏமாற்றாது என்பது என்ன நிச்சயம்? அதே போல் அசட்டு நம்பிக்கையிலும் உண்மை உருப்பெறலாமல்லவா? விஞ்ஞானத்தில் தான் என்ன? தளராத நம்பிக்கையின் விளைவைத்தானே காண்கிறோம்? இதில் எந்த இடத்தில் அபிப்பிராய பேதம்?" என்று கேட்டு நிறுத்தினார்.

"அபிப்பிராய பேதமில்லை; நமக்கு வேண்டியதைப் பெறுவதில் விஞ்ஞானத்தில் அதிக இடமிருக்கிறதென்று சொன்னேன்; அவ்வளவே."

"இருக்கலாம்; ஆனால் ஓயாத போராட்டமே எதற்கும் அடிப்படையாக அமைந்துள்ளது. குருட்டு நம்பிக்கையில் கண்களை மூடிக்கொண்டு போராடுகிறோம்; விஞ்ஞான வளர்ச்சி கண் திறந்த போராட்டத்தில் பிறக்கிறது; 'ஸில்வர் அயோடைட்' என்கிற பொருளை மேகத்தில் தூவினால் மழை பொழியும் என்று விஞ்ஞானம் சொல்கிறது. அந்த முயற்சி சில சமயங்களில் பலன் கொடுக்கிறது, சில சமயம் ஏமாற்றிவிடுகிறது; எதிர்பாராத போது – எதிர்பாராத பலனையும் தருவதாக அமைந்து விடுகிறது. ஆகவே–அசட்டு நம்பிக்கையும் சரி – விஞ்ஞானமும் சரி – ஒன்றையொன்று பின் பற்றியே செல்கிறது என்பதற்கு ஒரு கதை சொல்லுகிறேன்; கேட்பீர்களா? நிஜமாக நடந்தது."

"ஆஹா, தயார்!" என்று அனைவரும் ஏகோபித்துச் சொன்னதும் புதியவர் தொடங்கினார்.

"இப்போதெல்லாம் அங்கங்கே செயற்கை மழை பொழியச் செய்வதற்குப் பெருமுயற்சிகள் நடந்து வருவது அனைவருக்கும் தெரிந்திருக்கும்; தற்போது கையாளப்படும் முறைகளுக்குப்பெரும்

பணச்செலவு பிடிக்கும். மிகவும் சிக்கனமான முறையில், வெகு விரிவாகவும், விரைவிலும் பலன் தரத்தக்க விதத்திலே ஒரு புது முறையைக் கையாளும் ஆராய்ச்சியிலே தீவிரமாக ஈடுபட்டான் விஞ்ஞானி சந்திரபாபு. நம் பாரத தேசத்தின் விஞ்ஞானிகளுள் சந்திரபாபுவும் ஒருவனாக மதிக்கப்பட்டான். ஆகவே அவனுடைய ஆராய்ச்சி வெற்றியடைய வேண்டி செல்வச் சீமான்கள் பலரும், பிரமுகர்கள் பலருமாகப் பெருந்தொகை கொடுக்கவும், மற்றும்பல வழிகளிலும் அவன் எடுத்துக்கொண்ட பெருமுயற்சிக்கு உதவியளிக்க முன் வந்தனர். சந்திரபாபுவும் அவற்றை மனமுவந்து ஏற்றுக்கொண்டு இரவு பகலாக ஆராய்ச்சி வேலைகளில் ஈடுபட்டான். சில சமயங்களில் வாரக் கணக்காகவும்—மாதக் கணக்காகவும்கூட — தன் ஆராய்ச்சிச் சாலையை விட்டு வெளிப்படாமல் தன் வேலையில் ஆழ்ந்துகிடப்பது வழக்கம்.

வேளைக்குச் சரியான ஆகாரம் உட்கொள்வதில்லை; பல இரவுகள் நல்ல தூக்கமில்லை; ஓய்வுமில்லை—ஒழிவுமில்லை—அந்த அளவில் விஞ்ஞானம் அவனை விழுங்கிவிட்டது.

சந்திர பாபுவின் மனைவி விமலா தன் புருஷனின் நிலையைக்கண்டு பெருமூச்செறிந்தாள். ஒவ்வொரு சமயம் அவனிடம் அளவற்ற பரிவுகொள்வாள்; 'ஐயோ—பாவம்' என்று இரக்கப்படுவாள்; சில சமயம் தன் நிலைக்காகத்தானே பச்சாத்தாபப் பட்டுக்கொள்வதுமுண்டு. எப்படியோ அவள் பொழுதைத் தொலைத்துக்கொண்டிருந்தாள் என்றே சொல்லவேண்டும்.

'விஞ்ஞானிக்கு விவாகம் எதற்கு?' என்று விமலா அடிக்கடி எண்ணிக்கொள்வதுண்டு,

ஒரு முறை கிடைத்த அரிய சந்தர்ப்பத்தை நழுவவிட மனமின்றி அவள் அவனிடமே அதைப் பற்றிக் கேட்டுவிட்டாள்.

''என்னைவிட விஞ்ஞானமே உங்களை அதிகமாகக் கவர்ந்துவிட்டதா?''

''விஞ்ஞானம் முதல்; விமலா இரண்டாவது'' என்று சிரித்தபடி சந்திரபாபு பதிலளித்தான்.

இன்னும் ஏதோ சொல்ல அவள் வாயெடுத்தாள்; அதற்குள் அவன் போய்விட்டான்; கொண்ட மனைவியுடன் நின்று பேச அவனுக்கு அவகாசம் ஏது?

விமலா பெருமூச்செறிந்தாள்.

'பிரபல விஞ்ஞானியைக் கைப்பிடித்துவிட்டோம்' என்று அவள் பெருமைப்பட்டுக்கொண்ட காலமும் உண்டு. ஆனால் அப்போதெல்லாம்—'விஞ்ஞானி விவாகத்தின் அடிப்படையையே மறந்துவிடக்கூடிய விசித்திரப் பிறவி' என்ற உண்மை அவளுக்குத் தெரியாமல் இருந்ததுதான் பெருமைப்பட்டுக்கொண்டதன் காரணம்.

இல்லற இன்பத்தையே நுகராதவள் அவள் என்று சொல்வதற்கில்லை. அது எப்படிப்பட்டது என்று அவளும் உணர்ந்துதான் இருந்தாள். ஆனால் அதைப்பற்றிக் கனவுதான் கண்டாளா அல்லது நிஜமாகவே உணர்ந்தாளா என்று அவளே சந்தேகப் படக்கூடிய நிலையில் நின்றாள் என்றால்—நீங்களே அது எப்படி—எப்போது—நடந்திருக்குமென்பதை ஊகித்துக் கொள்ளுங்கள்.

'தன் புகழ் உலகமெல்லாம் பரவ வேண்டும்' என்ற பேராசை சந்திரபாபுவை எப்போது பற்றிக் கொண்டதோ அப்போதே அவன் புது மனிதனாக மாறிவிட்டான். விவாகத்தை மறந்தான்; உலகத்தை மறந்தான்; தன்னையே மறந்துவிட்டான்.

எந்நேரமும் ஆராய்ச்சி, ஆராய்ச்சி—சோதனை—சோதனை—மீண்டும் சொல்கிறேன்: விஞ்ஞானம் அவனை விழுங்கியேவிட்டது.

அவன் செய்த சோதனைகள் அவள் உள்ளத்திலே சொல்லத்தரமற்ற வேதனையை உண்டாக்கின. வாழ்வில் முக்கிய பங்குகொள்ளும் 'அகமுடையாள்' என்பதுபோய் அவனுக்கு வெறும் வேலைக்காரியாக விளங்கினாள்.

ஆயினும் அவள் அவனைக் கொஞ்சமும் குறை சொல்லவில்லை; முணுமுணுக்கவில்லை; முகத்தைத் தூக்கவில்லை; அவன்வேண்டித் தவிக்கும் புகழ் கூடிய சீக்கிரம் அவனுக்குக் கிட்ட வேண்டும் என்று அவளும் மனமார வேண்டிக் கொண்டாள்; அப்புறமாவது மனைவியின் ஏக்கத்தை ஒருவாறு உணர்ந்து அவள் பக்கம் திரும்பிப் பார்க்கலாமல்லவா—என்ற நம்பிக்கை அவளுக்கு.

ஆகவே அவன் ஏவும் வேலைகளைச் சந்தோஷத்துடன் செய்துகொண்டு காத்திருந்தாள்; அவன் வெற்றிக்காக அவளும் உணர்ச்சி பூர்வமாகப் பிரார்த்தனை செய்துகொண்டு காத்திருந்தாள்; தன் வேலையில் அவன் கொண்ட சிரத்தையையும், துடிப்பையும்விட—அவள் அவனிடம் காண்பித்த அக்கரையும், துடிப்புமே அதிகமாயிருந்தன.

இப்போது சொல்கிறேன். விஞ்ஞானம் அவனை விழுங்கிவிட்டது; அவன் அவளை விழுங்கிவிட்டான். ஆனால் அவள் எதை விழுங்கினாள் தெரியுமோ? விஞ்ஞான சோதனையில் அவன் வெற்றிபெற வேண்டுமென்ற குருட்டு நம்பிக்கையை விழுங்கிவிட்டாள்.

வள்ளுவர் கற்பித்த உண்மை மனைவியை விமலா ஓரளவு பூர்த்தி செய்துவிட்டாள் அல்லவா?

இன்னொன்றையும் நீங்கள் கவனிக்க வேண்டும். விமலா குருட்டு நம்பிக்கைக்கு ஓர் உதாரணம்; விஞ்ஞானி சந்திரபாபு விழிப்புணர்வுக்கு ஒரு

விளக்கம்; இந்த இரண்டும் எப்படி ஒன்றை யொன்று பற்றி நிற்கின்றன என்று நீங்கள் கவனிக்க வேண்டும்.

விஞ்ஞானம் வெற்றி பெற சந்திரபாபு விரும்புகிறான்; சந்திரபாபு வெற்றி பெற விமலா விழைகிறாள். நம்பிக்கை இந்த இருவிடமும் எந்தவிதத்தில் இழை யோடுகிறதென்பதை ஊன்றிக் கவனிக்க வேண்டும்.

வேண்டும் போது வேண்டும் அளவுக்கு மழை பொழியச் செய்வதில் சந்திரபாபு வைத்த நம்பிக்கை பலனளிக்கும் நிலைக்கு வந்துவிட்டது போலவே தோன்றியது.

ஏதோ காரியமாக அவனருகில் சென்ற விமலாவைத் திடீரென்று அவன் கட்டி யணைத்துக் கொண்டு—''கண்டு பிடித்து விட்டேன்! கண்டு பிடித்துவிட்டேன்— விமலா!'' என்று எல்லை மீறிய சந்தோஷ வெறியில் கூவினான்; அதே மூச்சில் அவளை இறுகப் பிடித்து முத்தமிட்டு— ''வெற்றி! விஞ்ஞானத்தில் வெற்றி! தனி மனிதனுக்கு வெற்றி!'' என்றெல்லாம் முழக்கினான்.

விமலா பிரமித்துப் போய் அவன் பேய்ப்பிடியில் கட்டுண்டு கிடந்தாள். அவளுக்கும் வெற்றிதான்! அவள் வைத்த நம்பிக்கையும் வீணாகிவிடவில்லையே! அந்த அணைப்பிலே அவள் உணர்ந்த இன்பத்துக்காக எதையும் தியாகம் செய்துவிடத் தயாராகிவிட்டாள். கிடைக்காததும் கிட்டி விட்டது போலிருக்கிறதே?

''என் ராஜா! உங்கள் வெற்றியில் நான் என்றுமே சந்தோஷப்பட்டது கிடையாதே!'' என்றாள் குதூஹலம் பொங்கச் சிரித்தபடியே.

''என் ராணி! இனிமேல் என்னை 'மழைக்கு ராஜா' என்று சொல்; 'விஞ்ஞானத்தின் ராஜா' என்று கூப்பிடு'' என்றான் சந்திர பாபு.

''இருக்கட்டுமே? எனக்கும் நீங்கள்தான் ராஜா; எங்கே? நான் யாரென்று இன்னொரு தரம் சொல்லுங்களேன்?''

''என் ராணி; மழை ராஜாவின் ராணி!'' என்றான் சந்திர பாபு அவள் கன்னத்தைச் செல்லமாக நிமிண்டியபடியே.

'அவனை விழிப்படையச் செய்த விஞ்ஞானம் வாழ்க' என்று தனக்குள்ளாகவே வாழ்த்திக் கொண்டாள் விமலா.

''சரி—இனிமேல் ஒரேயொரு வேலை பாக்கி நிற்கிறது: இந்தச் சோதனையை ஊரிலே பலர் முன்னிலையில் வெற்றிகரமாக நடத்திக் காட்டிவிடவேண்டும். வறண்டுகிடக்கும் வானத்திலிருந்து பெருமழை பொழியும் அதிசயத்தையும் செய்து காட்டிவிட்டால்—அப்புறம்—அப்புறம்—விமலா—அப்புறம் நீ கூட என்னைக் கண்டு பிடிக்க முடியாது!''

'காயும் வானம் கண்திறக்கும்; அப்புறம் அன்புக்காக ஏங்கி ஏங்கி வெடித்து நிற்கும் உள்ளத்திலே காதல் மழையும் பொழியுமோ?' என்று தனக்குள்ளாகவே எண்ணமிட்டாள் விமலா.

ஊரை அடுத்த பரந்த வெளியிலே ஆயிரக் கணக்கான மக்கள் திரண்டிருந்தனர். வறண்ட மேகம் மழை நீரைப் பொழியும் அதிசயத்தைப் பார்க்கப் பாமரருடன் பெரும் பிரமுகர்களும் ஒன்றுகூடியிருந்தனர்; பெண்கள் — குழந்தைகளுக்கும் குறைவில்லை.

அங்கும் இதேபோலத்தான் பிருமாண்டமான ஏரி; அதுவும் பல வருஷங்களாக மழையையே பார்க்காமல் வற்றி வறண்டு காணப்பட்டது. சுற்றுவட்டத்தில் உயர்ந்து நின்ற மலைகள்; மலைகளின் முடிகளிலே ஆங்காங்குப் பல வெண்ணிற மேகங்கள்—ஜீவகளையிழந்தவைபோலே வெளிறிப் போய்ச் சாய்ந்து கிடந்தன.

விமலாவும் அங்கே பிரஸன்னமாயிருந்தாள்; அவ்வளவுபேர்கள் வியந்து புகழப்போகும் தன் கணவனின் அற்புத சாதனையை அவளும் கண்டு களிக்கக் காத்திருந்தாள்.

மாலை நேரம்; வெய்யோனின் செந்நிறக்கதிர்கள் மேகத்தை ஊடுருவி மலையில் பிரதிபலித்தன; பார்க்க அழகாயும் இருந்தது; கொடூரமாகவும் இருந்தது.

சந்திரபாபு தனக்கு வேண்டிய உபகரணங்களுடன் விமானத்தில் புறப்பட்டான்.



சிறிது தரையில் ஓடிய பின்னர் விமானம் மேலெழும்பி மலைகளின்மீது கவிந்து கிடந்த மேகத் திரைகளை நோக்கிப் பறந்து வட்டமிட்டுக் கொண்டேயிருந்தது.

மேகத் திரைகளில் ஏதோ ஒரு பொருள் பெரும் அளவில் தூவப்பட்டதை அங்குக் குழுமியிருந்தவர்கள் அனைவரும் பார்க்கத் தவறவில்லை.

என்ன ஆச்சர்யம்! பார்த்துக் கொண்டிருந்தபோதே மெதுவாக ஊர்ந்துகொண்டிருந்த வெண் மேகங்கள் வெகு வேகமாகக் கருநீலமாக மாறத் துவங்கிவிட்டன.

சூரியனின் கதிர்கள் அவற்றுள் புகுந்து புறப் படும் பேரானந்தக் காட்சி கண் கொள்ளாக் காட் சியாக இருந்தது.

மக்களின் சந்தோஷ ஆரவாரத்தைப் பற்றிச் சொல்லவும் வேண்டுமா? ஒரே வார்த்தையில்— அவர்கள் குதூகலம் கட்டுக்கு அடங்காமல் போய் விட்டது.

விமானம் மெள்ள மெள்ளக் கீழிறங்கி வருவ தையும் எல்லோரும் கண்ணுற்றார்கள்.

தரையிலிறங்கிய சந்திரபாபுவும் ஒரு பக்கமாக நின்றுகொண்டு வான வெளியில் நிகழும் மாறு தல்களை வெகு ஆவலுடன் கூர்மையாகக் கவ னித்து வந்தான்.

கார்மேகங்களைப் போலவே அவை தோன்றின: திடீரெனக் குளிர்ந்த காற்றும் வீசத் தொடங் கியது.

அத்தனை பேர்களும் அதியாவலுடன் மழையை எதிர் நோக்கினர்.

வெகு நேரமாக வானத்தையே பார்த்துக் கொண்டு காத்திருந்தும் ஒரு பொட்டுத் தூறலும் கீழே விழவில்லை.

மக்கள் பொறுமை யிழக்கத் தொடங்கிவிட்ட னர்; கூடியிருந்த கூட்டத்தில் அதற்குரிய அறி குறிகள் காணப்பட்டன.

கறுத்த மேகங்கள்கூட, கொஞ்சம் கொஞ்சமாக வெளுக்கத் தொடங்கிவிட்டன.

விஞ்ஞானம் சந்திரபாபுவை நோக்கி விகார மாகச் சிரித்தது.

வானம் சிரித்தது; மேகங்கள் சிரித்தன; மலை வாயில் விழப்போகும் சூரியனும் சிரித்தான்.

குழுமிக்கிடந்த மக்களிடமிருந்து கிளம்பிய கேலிக் குரல் மற்றதைவிட மிகக் கொடுமையாக ஒலித்தது.

"இதோ – மேக மண்டலத்தில் என்ன கேடு விளைந்து விட்டதென்று கண்டறிய இப்போதே மீண்டும் கிளம்புகிறேன்; இனி மழை பெய்தா லன்றி நானும் கீழிறங்கவே மாட்டேன்; ஒன்று — வானத்திலிருந்து தண்ணீர் மழை; அல்லது ரத்த மழை!" என்று வீராவேசத்துடன் முழங் கிய சந்திரபாபு மேக மண்டலத்தோடு போராட மீண்டும் புறப்பட்டுவிட்டான் விமானத்திலே.

மழைக்காக வானத்தையே கிழித்தெறிய முற் படுவதைப்போலே விமானம் மேல் நோக்கிப் பறந்து மறைந்ததை அனைவரும் வியப்பு மேலிடக் கண்ணுற்றார்கள்.

மீண்டும் மேகங்கள் இருண்டன. பேய்க் காற்று வீசியது.

வரப் போகும் பெருமழைக்குப் பயந்துதானோ — என்னவோ— சூரியனும் பதுங்கிவிட்டான்.

மெதுவாக வானம் இருளடையத் துவங்கியது.

கறுத்துத் திரளும் மேகத்திரைகளினூடே சந் திர பாபுவின் விமானம் புகுந்து புறப்பட்டு வட் டமிட்டதை ஜனங்கள் கீழே நின்றபடி கண் ணிமைக்காமல் கவனித்தார்கள்.

விமலா நின்று கொண்டிருந்த இடத்துக்கு மேலே விமானம் பறந்தது; அவளைச் சுற்றியே தலைக்கு நேரே வட்டமிட்டு வந்தது.

காற்று வீச்சின் வேகம் பலப்பட்டது; மேலும் அதிகரித்தது.

விமலாவின் முகத்திலே—மேலே யிருந்து 'ஜில்' லென்று ஏதோ தெறித்தது; அடுத்தாற் போல் அவள் கையிலும் அது விழுந்தது; மேலும் சில துளிகள், 'பொட பொட'வென்று அவள் மீதே தொடர்ந்து விழுந்தன,

விழுந்தது என்னவென்று விமலா கவனித் தாள்; ரத்தத் துளிகள் — ஆம்; சந்தேகமேயில் லாமல் — ரத்தத் துளிகளே!

"அய்யோ? உங்கள் ரத்த மழையா? இரக்க மற்ற கடவுளே? சொன்னபடியே அவர் ரத்த மழையைக் கொட்டிவிட்டார்; இனி மேலாவது வானத்து நீரைக் கொண்டு பொழியக் கூடாதா?" என்று வெறி கொண்டவளைப் போலே உரத்த குரலில் கூவிக் கேவிக்கேவி அழுதாள்.

அவ்வளவுதான்-

கணப் பொழுதிலே அத்தனையும் நிகழ்ந்துவிட் டன.

அவ்வளவு கருநிறம் வானத்தை எப்படித்தான் கவ்விக் கொண்டதோ? அப்படிப்பட்ட சூறுவளிக் காற்று எங்கிருந்துதான் அப்படிச் சுழன்று சுழன்று சீறியதோ?

அதைத் தொடர்ந்து பெய்த மழையாவது மழை!

சாதாரண மழையாகவா இருந்தது அது? ஒவ் வொரு நீர்த் தாரையும் கால் அங்குல கனத்திற்கா வேகமாக வந்து விழும்?

அப்புறம் அங்கு நடந்த பெரும் அமளியிலே- என்ன நடந்தது—எப்படி நடந்தது—என்று சொல் லவே முடியாத அளவுக்குப் பெருங் குழப்பமாகத் தான் முடிந்துவிட்டது; மகா கோரக் காட்சி என்று வேண்டுமானால் குறிப்பிடலாம்—

மலையில் மோதி நொறுங்கிய விமானம் ஒரு புறம் குவியலாகக் கிடந்தது.

சேற்றிலும்–சகதியிலும் கேட்பாரற்றுக் கிடந்த விமலத்தின் பிரேதம்–பெருங் கூட்டத்தில் அகப்பட்டு நசுக்குண்டு–மிதிபட்ட அடையாளங்களுடன்–வானத்தை நோக்கி விகாரமாகச் சிரிப்பது போல் தோன்றியது.

இப்போது சொல்லுங்கள்: மழை பெய்தது எப்படி? யாருக்காக? சந்திரபாபுவின் முயற்சியிலே பெய்த மழையா, அல்லது விமலாவின் பிரார்த்தனைக்காகப் பெய்த மழையா?

புது நண்பர் தம் கதையைச் சொல்லி முடித்துவிட்டார்; சாதாரணமாக முடிக்கவில்லை; பெரிய கேள்வியுடன் முடித்தார்.

யாரும் உடனே பதில் சொல்ல முன் வரவில்லை; அது முடியாத காரியமும் ஆகும்.

"விஞ்ஞானம்- பிரார்த்தனை - இரண்டுக்குமே கட்டுப்பட்டது மழை என்று வைத்துக் கொள்ளலாமே?" என்று மத்யஸ்தத் தீர்ப்புக் கூறினார் ஒருவர்.

"எப்படியோ இருக்கட்டும்; ஆனால் ஒன்று மட்டும் சொல்ல ஆசைப்படுகிறேன்; மக்கள் மழைக்காகப் பெரிதும் ஏங்கித் தவித்துக்கொண்டிருக்கும்போது மிகவும் சுவாரஸ்யமான மழைக்கதையொன்றை அழகாகச் சொல்லிவிட்டீர்கள்; இதுவே இப்போதைக்கு எங்களுக்குப் போதுமானது" என்று முத்தாய்ப்பு வைத்துப் பேசினார் பத்திரிகைப் பித்தர்.

"கதாசிரியன் கற்பனையில் காணுவதையெல்லாம் விஞ்ஞானி செயலில் காட்டுகிறான்; ஆகவே இருவரும் மனித சமூகத்துக்கு எப்போதும் அவசியம் தேவைப்பட்டவர்கள் — சரி; நேரமாகிறது; நான் விடை பெற்றுக்கொள்கிறேன்" என்று சொல்லி, கதை சொன்னவர் எழுந்துபோய் விட்டார்.

"இவர் யார் தெரியுமா உங்களுக்கு?" என்று பத்திரிகைப் பித்தர் தம் நண்பர்களைப் பார்த்து வினவினார்.

"தெரியாதே?"

"பிரபல எழுத்தாளர் 'முன்னேற்றவாதி'யைப் பற்றித் தெரியாதவர்களே இருக்கமுடியாதே?"

"ஆமாம்? 'பத்து வருஷங்கள் முந்திக்கொண்டு பார்ப்பவர்' என்றுகூட அவரைப்பற்றிப் பெருமையாகப் பேசிக்கொள்வார்களே? ஆனால் அவருக்குப் பைத்தியம் பிடித்துவிட்டதாகச் செய்தி பிரமாதப் பட்டதே!"

"ஆமாம்; அவரே இவர்! தீவிர சிந்தனையாளர்; அதே காரணத்தால் மனசு கலங்கிவிட்டதாகவும் சொல்லிக்கொள்கிறார்கள்."

"ஆஹா! கிடைத்தற்கரிய ரத்தினம்!"

அனைவரும் ஏக காலத்தில் பெருமூச்செறிந்தார்கள்.

எங்கும் நிசப்தம் நிலவியது.

எதிரே வறண்ட ஏரி பிரும்மாண்டமாகப் பரவிக் கிடந்தது. ●





# வைத்தியம்

அபோதபுரியில் பயித்தியக்காரர் ஆஸ்பத்திரி, மத்தியான சமயம். மணி பதினொன்று அடித்தது. சாப்பாட்டு வேளை. கட்டுக்கடங்காத பயித்தியக்காரர் அறைகள் மட்டும் திறக்கப்படவில்லை. மற்றவர் எல்லோரும் ஒரு கையில் அலுமினியத் தட்டும் மற்றொரு கையில் குவளையும் கொண்டு வருகிறார்கள். அங்கிருப்பதற்கு அடையாளமாக அவர்களுள் சிலர் சங்கீதத்தில் ஈடு படுகிறார்கள்.

ஒருவன் "அப்பனே, சத்திய கீர்த்தி அரிச்சந்திரன், நானே கண்டாய்" என்ற விருத்தத்தை முகாரியில் பாடி சோகிக்கிறான். மற்றொருவன் விகடகவி போலும்" அய்யா பழனி மலை வேலா, எனக்கொரு கொய்யாப் பழம் நீ தாதா" என்று பக்தி ரஸப் பாடலை வெட்டிப் பாடுகிறான். இன்னொருவன் கிராம வாசியாயிருக்கலாம். "காடைக் கூடை கக்கத்திலே, கறுத்த மச்சான் பக்கத்திலே" என்ற தெம்மாங்கில் தன்னை மறந்து லயிக்கிறான். எல்லோரும் சாதமும் குழம்பும் வாங்கி அவரவர் அறைக்குப் போகிறார்கள்.

இந்தக் கூட்டத்தில் சேராமல் கொஞ்ச தூரத்தில் நாலுபேர் தட்டும் கையுமாக வருகிறார்கள். மற்றவரைப் போல் அவர்கள் முகத்தில் அசடு தட்டவில்லை, நடை தடுமாறவில்லை, பேச்சிலும் வித்தியாசமில்லை. நிதானமாகத் தெளிந்த பார்வையோடு வருகிறார்கள். அவர்களையே பார்த்துக்கொண்டு ஆஸ்பத்திரி சூப்பிரண்டு டாக்டர் அகோரமூர்த்தி எதிர்ப்பக்கமாக வருகிறார். அவருடன் வருபவர் உதவி சூப்பிரண்டு டாக்டர் பால கிருஷ்ணன்.

"நீங்கள் நாலுபேரும் ஆஸ்பத்திரிக்கு மாப்பிள்ளைகளா? உங்களுக்கு உபசாரம் பண்ணிச் சாப்பாடு போடவேணுமா? பெரிய மனிதர், மற்றவரோடு சேரமாட்டீர்களோ? துரை மக்கள்! என்று கோபமும் பரிகாசமுமாகப் பேசினார் டாக்டர் அகோரமூர்த்தி. சாந்தமான முகத்துடன் அவர்களை உற்று நோக்கினார் டாக்டர் பால கிருஷ்ணன்,

"டாக்டர்! இவர்களால்தான் நமக்கு மிகுந்த தொல்லை" என்றார் அகோரமூர்த்தி.

"என்ன ஸார்! நாங்கள் என்ன செய்கிறோம்? உங்கள் விதிகளுக்குக் கீழடங்கி நடக்கவில்லையா?" என்றார் நால்வருள் ஒருவர்.

"ஐயா! நீங்கள் வக்கீலென்று எனக்குத் தெரியும். கோர்ட்டில் இருப்பதாக ஞாபகமோ? வாயை மூடும்."

"வக்கீல் வைத்தியநாதன் என்ன சொன்னார்? நீங்கள் பிரமாதமாகக் குற்றம் சாட்டுகிறீர்களே!"

"ஓகோ, ஜமீன்தார் அவர்களோ! உங்கள் போதையூரில் நவராத்திரி தர்பார் நடப்பதாக நினைப்போ? ஒழுங்காய்ச் சோற்றை வாங்கிக்கொண்டு போம்."

"மரியாதையினால்தான் மரியாதையை அடைகிறோம். வழுக்கி விழுந்ததுபோல் இங்கு வந்திருக்கிறோமேயொழிய, மூளை குழம்பி வரவில்லை."

"கவியரசே! வாரும். உமது கற்பனை அலங்காரங்களைச் சித்திரித்துக் காட்டும் இடம் இது இல்லை. நினைவு இருக்கட்டும்."

"தோழர்களே! டாக்டருடைய கருத்து நமக்குத் தெரிந்தது தானே. என்றைக்காவது நம்மிடம் அவர் அனுதாபமோ அன்போ காட்டினதுண்டா? நம்மைப்பற்றி அவர் மனதில் வைரம் பாய்ந்திருக்கிறது. வழக்காடி என்ன பயன்!"

"இதோ, காதலர் கனகலிங்கம்! அவர் சொல்வதைக் காது கொடுத்துக் கேளுங்கள். அது தான் உண்மை. பேசிப் பேசி அவரது இன்பக் கனவுகளைச் சிதைத்து விடாதீர்கள். இப்போது அவர் காதலி முன் நிற்கிறார்." இவ்விதம் சொல்லி விட்டு டாக்டர் பால கிருஷ்ணனை நோக்கி, "பார்த்தீர்களா! கொஞ்சம் சுதந்திரம் அளித்தால் என்ன



# யாருக்கு?

நை. காசிபன்

பாடு படுத்துகிருர்கள்! இப்படி விட்டுக் கொடுத்தால் அபாயம் நமக்குத் தான். இந்தத் தொத்து நோய் மற்றவரிடம் பரவுமானல், நமது கதி என்ன ஆகும்?'' என்று கேட்டார் சுப்பிரண்டு.

''கண்டிப்பு இருக்கவே இருக்கிறது. அவசரப்பட்டதாக நம்மேல் அதிகாரிகள் குற்றம் சாட்டலாகாது. அதிலும் பயித்தியக்கார ஆஸ்பத்திரியில் நோயாளிகள் குற்றவாளிகளாவார்களா என்ற சட்ட பூர்வமான கேள்வியும் பிறக்கும். எதற்கும் பொறுத்துப் பார்க்கலாம்' என்று பாலகிருஷ்ணன் அகோர மூர்த்தியைச் சாந்தப் படுத்தினர்.

ஒரு வாரத்துக்குப் பின் ஆஸ்பத்திரி அல்லோகல்லோலப்படுகிறது. கவர்னர் அதைப் பார்வையிடப் போகிருராம். கட்டிடங்களுக்கெல்லாம் வெள்ளை யடித்திருக்கிறது. குப்பை கூளங்கள் அவசர அவசரமாக வெளியேறுகின்றன. பூஞ்செடிகளுக்குக் கத்தரி வேலை நடக்கிறது. பெரிய மரங்களுக்குப் பண்ணை பிடித்துத் தண்ணீர் ஊற்றுகிருர்கள். எங்கும் சுத்தமான தோற்றம்.

நோயாளிகளை வரிசையாய் நிறுத்தி உபதேசம் பண்ணுகிருர் டாக்டர் அகோர மூர்த்தி: ''நாளைய தினம் கவர்னர் உங்களைப் பார்க்க வருகிருர். சோப்புக் கொடுத்திருக்கிறேன், அதை வாங்கி உங்கள் சட்டை, துணிகளுக்குப் போட்டுச் சுத்தமாய் வைத்துக்கொள்ளுங்கள். கவர்னரிடம் நீங்களாகப் பேசகூடாது. கேட்டால், சாப்பாடு ஜல வசதியெல்லாம் நன்ருயிருக்கிறதென்று சொல்லுங்கள். அதிகமாக எதுவும் சொல்ல வேண்டாம். இது கண்டிப்பான உத்தரவு, ஜாக்கிரதை,'' வரிசை கலைகிறது.

அடுத்தபடியாக அகோரமூர்த்தி அந்த நாலு பேர் இருக்கும் அறைக்குப் போகிருர். வேறு பக்கம் பார்த்துக்கொண்டு, ''கனவான்களே! கவர்னர் நாளை வருகிருர். ஒழுங்காகவும் மரியாதையாகவும் நடந்து கொள்ளுங்கள்'' என்று சொல்லிவிட்டு விரைவாகப் போய்விட்டார். இது அவர்களுக்குத் தூபம் போட்டது போலிருந்தது. கேலியாகச் சிரித்தார்கள்.

வக்கீல் வைத்தியநாதன்—டாக்டர் நம்மைப் பார்த்துப் பேசவில்லையே!

ஜமீன்தார் சொக்கநாதத் தேவர்–உங்கள் சட்ட ஞானத்தைக் கண்டு அவர் நடுங்குகிருர்.

கவிவாணிதாசன்—உங்கள் ஆணித்தரமான பதில் அவர் நெஞ்சில் அம்புபோல் பாய்கிறது. பாவம்! இரவில் தூங்கமாட்டார், உங்கள் நினைவு சிம்ம சொப்பனம் அவருக்கு.

கனகலிங்கம் — என்னைக் காதலனென்று அழைக்கிருர், அந்தப் பரிகாச வார்த்தையில்தான் என் வாழ்க்கையின் உண்மை ஒளிவீசுகிறது. சில சந்தர்ப்பங்களில் இது மாதிரியான கேலிப் பதமே உண்மை வாக்காகத் தொனிக்கிறது.

வக்கீல் வைத்தியநாதன்–கவர்னர் வரும் செய்தி எனக்குப் புதையல் கிடைத்த மாதிரி.

ஜமீன்தார் சொக்கநாதத் தேவர்— எப்படி?

வக்கீல் வைத்தியநாதன்—நாளை வரை பொறுத்துப் பாருங்கள். அப்பொழுது எல்லாம் வெட்ட வெளிச்சம்.

அன்று மாலை டாக்டர் அகோர மூர்த்தி டாக்டர் பால கிருஷ்ணனை அழைத்து, ''அந்த நால்வரும் என்னை வெறுக்கிருர்கள். எனக்கு இன்னும் சந்தேகமாய்த் தான் இருக்கிறது. நான் போய்ப் புத்திமதி சொன்னல் அவர்களுக்கு விபரீதமாய்ப்படுகிறது, உங்களிடம் அவர்களுக்கு, நல்ல மதிப்பு இருப்பது போல் தோன்றுகிறது. கவர்னர் வரும் போது சரியாக நடந்து கொள்ளும் படி நீங்கள் தான் எடுத்துச் சொல்ல வேண்டும். அந்த வக்கீல் வைத்தியநாதனை நல்ல வார்த்தை மூலம் சரிக்கட்டுங்கள். மற்ற

வர்களை நான் பார்த்துக் கொள்ளுகிறேன். இப்பொழுதே அவர்களைச் சந்தித்துப் பேசுங்கள். ஆபீசில் சில ரிக்கார்டுகளைப் பார்வையிட வேண்டும். ஹைக்கோர்ட்டுக்கு அந்த வக்கீல் மூன்று தரம் மனுச் செய்து கொண்டார். ஏதோ அலட்சியமாக இருந்து விட்டேன். அந்த மனுக்கள் ரிக்கார்டுகளுடன் கலந்திருக்கக் கூடாது. அதை இப்பொழுதே கவனிக்கிறேன். அதோ, நால்வரும் வருகிறார்கள். இது தான் தக்க சமயம். போய் வருகிறேன்'' என்று சொல்லி விட்டு மறைந்தார் அகோரமூர்த்தி.

மறு நாள் கவர்னர் வந்து ஆபீசைப் பார்வையிட்டார். பிறகு நோயாளிகள் வரிசையைக் கவனித்தார். அவருடன் டாக்டர் பாலகிருஷ்ணன் தான் வந்தார், அப்புறம் அந்த நால்வர் இருக்கும் அறைக்குக் கவர்னரை அழைத்துச் சென்றார்,



டாக்டர் பாலகிருஷ்ணன்—நான் கவனித்தது வரை இந்த நால்வரும் கௌரவமாக நடந்து கொள்கிறார்கள். ஒரு போதும் கிதானம் தவறினதில்லை.

கவர்னர்—அப்படியானால் கேள்விகள் கேட்கலாம், இல்லையா?

டாக்டர் பாலகிருஷ்ணன்—ஆம், அவ்விதமே செய்யலாம்.

கவர்னர்—[நால்வரையும் பார்த்து] நீங்கள் சௌக்கியமாய் இருக்கிறீர்களா? ஏதாவது உங்களுக்கு வேணுமா?

உடனே வக்கீல் வைத்தியநாதன் முன்வந்து கவர்னருக்கு மரியாதை செய்தார்.

வக்கீல் வைத்தியநாதன்—வேறொரு குறையுமில்லை ஒரு விண்ணப்பம்.

கவர்னர்—என்ன அது?

வக்கீல் வைத்தியநாதன்—சில வார்த்தைகளில் என் கதையை முடிக்கிறேன். தயவு செய்து கேட்கவேணும். நான் ஒரு வக்கீல், வாழ்க்கையில் எனக்கு நிம்மதியில்லை. என் மனைவி எனக்கு அடங்கி நடக்கவில்லை. நான் பலமுறை புத்தி சொல்லிப் பார்த்தேன். அவள் திருந்தவில்லை. பிறந்த வீட்டுக்கு அவளை அனுப்பிவிட்டேன். அவள் சகோதரன் வந்து என்னுடன் சண்டை போட்டான். தன் சகோதரியை என்னிடம் கொண்டுவிடப் போவதாக அதிகார தோரணையில் ஆர்ப்பாட்டம் பண்ணினான். நான் இணங்கவில்லை. பிறகு திடீரென ஒருநாள் என் மனைவி வீட்டுக்குள் நுழைந்து அமர்க்களப்படுத்தினாள். நானும் இரைந்து விவகாரம் பேசினேன். முன் ஏற்பாட்டுடன் வந்த அவள் சகோதரன் போலீசாரை அழைத்து என்னைப் பைத்தியக்காரனென்று சொல்லிவிட்டான். ஆனால் ஹைக்கோர்ட்டில் ஆஜராகி என் வழக்கை நீதிபதியிடம் நானே வாதித்தேன். இருந்தாலும் சோதனைக்காக என்னை இங்கே கொண்டுவந்து சேர்த்தார்கள். எனக்குக் கொஞ்சம் மூளைக் கலக்கம் இருப்பதாயும் திடீரென்று அது கிளம்பலாமென்றும் எதற்கும் ஆறுமாத காலம் இந்த ஆஸ்பத்திரியில் தமது பார்வையில் என்னை வைத்திருப்பது நலமென்றும் டாக்டர் அகோரமூர்த்தி கூறினார். ஆறு மாதத்திற்குப் பின் தம்மிடம் ஆஜராக வேண்டுமென்று நீதிபதி தீர்ப்பளித்தார். அந்தக்காலம் முடிவடைந்து ஒரு மாதமாகிறது. அதற்குள் மூன்று மனுக்கள் எழுதி, சூப்பிரண்டு மூலம் ஹைக்கோர்ட்டுக்கு அனுப்பினேன். இதுவரையிலும் பதில் ஒன்றும் கிடைக்கவில்லை. மனுக்களை நீதிபதிக்கு அனுப்பினதாக அவர் என்னிடம் தெரிவிக்கவேயில்லை. கோர்ட்டில் நான் ஆஜராகவேணும். இதுதான் என் விண்ணப்பம். [மனு ஒன்றைக் கவர்னரிடம் கொடுக்கிறார். அவர் டாக்டரைப் பார்க்கிறார். டாக்டர் அதை வாங்கிக்கொள்கிறார்.]

கவர்னர்—டாக்டர்! இவர் மனுக்களைச் சூப்பிரண்டு ஹைக்கோர்ட்டுக்கு எப்பொழுது அனுப்பினார்? என்ன பதில் வந்தது?

டாக்டர் பாலகிருஷ்ணன்—நான் இந்த ஆஸ்பத்திரிக்கு வந்து ஒரு மாதந்தான் ஆகிறது.

கவர்னர்—ரிக்கார்டுகளைப் பார்த்தால் தெரியுமே.

டாக்டர் பாலகிருஷ்ணன்—ஆம்.

கவர்னர்—நான் சூப்பிரண்டைக் கேட்டுத் தெரிந்துகொள்கிறேன். மற்ற மூவரும் எப்படி?

டாக்டர் பாலகிருஷ்ணன்—இந்த நாலு பேரும் ஒரே தரம். யோக்கியமாய் நடந்துகொள்கிறார்கள்.

கவர்னர் ஆபீசை நோக்கித் திரும்பிவிட்டார்.

இரண்டு வாரம் கழியவில்லை, டாக்டர் அகோரமூர்த்தியை வேறு இடத்திற்கு மாற்றிவிட்டார்கள். டாக்டர் பாலகிருஷ்ணன் சூப்பிரண்டு பதவிக்கு உயர்த்தப்பட்டார்.

போதையூர் ஜமீன்தார் இறந்துபோனதை டாக்டர் பாலகிருஷ்ணன் பத்திரிகை மூலம் அறிந்தார். உடனே பத்திரிகையைச் சொக்கநாதரிடம் கொடுத்தார். சொக்கநாதர் பார்த்தார், அவர் கண்களில் நீர் ததும்பிற்று. டாக்டர் அதைக் கவனித்துவிட்டார்.

டாக்டர் பாலகிருஷ்ணன்—ஏன் கலங்குகிறீர்கள்?

சொக்கநாதர்—இறந்துபோனவர் என் தம்பியாக வேண்டும், சிறிய தகப்பனார் மகன்.

டாக்டர் பாலகிருஷ்ணன்—நீங்கள் இருக்கும்போது அவர் எப்படி ஜமீன்தார் ஆனார்?

சொக்கநாதர்—அதுதான் என் சரிதம். சொல்லுகிறேன். சிறு வயதிலேயே தெய்வ பக்தி எனக்கு அதிகம். படிக்கும்போதே தினம் கோவிலுக்குத் தவறாமல் போவேன். எப்பொழுதும் தேவாரம், திருவாசகம் படித்துக்கொண்டிருப்பேன், வீட்டிலும் பூஜையுண்டு. இது சிலருக்குப் பிடிக்கவில்லை. என் தமையனார் ஜமீன்தார் இறந்தார். அவருக்குப் பிள்ளையில்லை. நான்தான் வாரிசு. இப்பொழுது இறந்துபோன என் தாயாதிக்காரன் சூழ்ச்சி செய்து எனக்குப் பயித்தியமென்று டாக்டரின் அத்தாட்சிப் பத்திரம் வாங்கினான். உடனே இங்கு வந்து சேர்ந்தேன். டாக்டர் அகோரமூர்த்தி என்னைப் பரீட்சை செய்து விட்டுக் கொஞ்சம் தயங்கினார். ஆனால் என் தம்பி அவரோடு தனித்துப் பேசினான். அதிலிருந்து அவர் என்னிடம் கடுகடுப்பாய்த்தான் இருந்தார். என் தம்பிக்கோ பிள்ளையில்லை, ஜமீனுக்கு இப்போது நான் ஒருவனே வாரிசு.

---

டாக்டர் பாலகிருஷ்ணன்—அப்படியானால் கலெக்டர் உங்களைப்பற்றி அரசாங்கத்துக்குத் தெரிவித்திருக்கவேண்டும். தாங்கள் மனு ஒன்று எழுதிக் கொடுங்கள். என்னாலான உதவி செய்கிறேன்.

சொக்கநாதர்—உங்கள் உதவிக்கு நான் என்ன செய்யப்போகிறேன்.

டாக்டர் பாலகிருஷ்ணன்—போய் வாருங்கள்.

ஒரு வாரம் கழிந்தது. காலை நேரம். அந்த நால்வரையும் டாக்டர் பால கிருஷ்ணன் தமது பங்களாவுக்கு அழைத்தார். அவர்களைத் தமக்கு எதிரில் உட்காரும்படி சொன்னார். டாக்டர் என்ன சொல்லப் போகிறாரோ என்று ஆவலுடன் எதிர் நோக்கியிருந்தார்கள்,

டாக்டர் பால கிருஷ்ணன்— உங்கள் நால்வருக்கும் இன்று விடுதலை. சாப்பாட்டை முடித்துக் கொள்ளுங்கள்.

கவி வாணி தாசன்— எங்கள் நன்றி. ஆனால் இந்த நற்செய்தி எங்களைத் திடுக்கிடச் செய்கிறது. நடந்தது எங்களுக்குத் தெரியாததால். இது ஆச்சரியமாகவும் இருக்கிறது.

டாக்டர் பால கிருஷ்ணன்—[மகிழ்ச்சியுடன்] எல்லாம் நீதியின் அருள். வக்கீல் வைத்தியநாதன் நீதிபதி முன் ஆஜராக வேண்டும். அவரது கேள்விக்கு நேரான பதில் சொல்லி, சுதந்திர புருஷராகலாம். சொக்க நாதர் ஜமீன்தாரென்று அரசாங்கத்தார் தீர்மானித்திருக்கிறார்கள். ஆனால் அவரும் நீதிபதி முன் தாம் நிதான மனிதர் தானென்பதை நிரூபித்து ஜமீனை அடையலாம். கவி வாணி தாசருடைய நண்பர் நீதிபதிக்கு மனுச் செய்து அவரது விடுதலைக்காக முயன்றிருக்கிறார்கள். அவரும் கோர்ட்டுக்குப் போய், தாம் சுவாதீன புத்தியுள்ளவரென்பதை உறுதி பண்ணிச் சுயேச்சை பெறலாம். நான்காவது கனகலிங்கத்தின் காதலி நீதிபதி முன் தானே ஆஜராகி அவரையே மணக்க விரும்புவதாகச் சொல்லியிருக்கிறாள். நீதி மன்றத்தில் அவரும் தம் கட்சியை எடுத்துரைக்கலாம்.

கனகலிங்கம்—என் காதலி முதலில் தகப்பனுருக்குப் பயந்தாள். இப்பொழுது காதல் வெற்றி கொண்டது. அவளைக் காதலித்தப் பணக்காரனும் தகப்பனும் சேர்ந்து செய்த சூழ்ச்சியால்தான் நான் இங்கு வந்தேன்.

கவிவாணிதாசன்—புதிய பாணியில் புரட்சிக் கவிதை எழுதினேன். போலி எழுத்தாளர் பகை




யைச் சம்பாதித்தேன். அவர்கள் புகழ் மங்க ஆரம்பித்தது. பொருமையால் தூண்டப்பெற்று ஏராளமான பொருள் செலவழித்து என்னை இங்கே கொண்டுவந்தார்கள்.

டாக்டர் பாலகிருஷ்ணன்—இனிமேல் உங்களுக்கு நல்லகாலந்தான். நீதிபதிக்கு அணுவளவும் சந்தேகம் ஏற்படாவண்ணம் உங்களைத் தாங்கி அத்தாட்சிப் பத்திரம் அனுப்பிவிட்டேன்.

நால்வரும் டாக்டருக்கு நன்றி செலுத்துகிறார்கள்.

டாக்டர் பாலகிருஷ்ணன்—நான் வந்ததுமே உங்கள் நடத்தையால் உங்களிடம் அனுதாபம் பிறந்துவிட்டது எனக்கு. ஆனால் அப்போது என்னால் ஒன்றும் செய்யமுடியவில்லை—எனக்கு மேலதிகாரி ஒருவர் இருந்ததால். அதுதான் உங்களுக்குத் தெரியுமே. நீங்கள் கண்ணியமுள்ள மனிதர். இப்பொழுது நீங்கள் பிரிந்து போவதால் மகிழ்ச்சி ஒரு பக்கம், வருத்தம் ஒரு பக்கம் எனக்கு. அகாரணமாக இங்கு வந்த போதிலும் விடுதலையாகிறீர்கள் என்று நினைக்கும் போது நான் மகிழ்ச்சியடைகிறேன். ஆனால் இத்தனை நாள் நீங்கள் காவலில் இருந்தது ஒரு கேள்வியைக் கிளப்பிவிட்டது. பயித்தியம் யாருக்கு—உங்களுக்கா, உங்களை இங்கு வைத்திருந்த எங்களுக்கா? இதுதான் என் மனத்தை உறுத்திவருகிறது. இன்றுதான் வாய்விட்டுச் சொல்லுகிறேன். வந்தனம்.

நால்வரும் எழுந்து டாக்டர் பாலகிருஷ்ணனை வணங்கினார்கள். ●



Edited & Published by N. R. Ramanujam & Printed by S. Rangaswami at the Cauveri Colour Press, Besant Road, Kumbakonam.

# இந்த உபகண்டத்தில் நாலுபேரில் ஒருவர் மலேரியாவினால் பீடிக்கப்படுகிறார்கள்

கொஞ்சம் யோசித்துப் பாருங்கள். எண்ணிக்கையில் சொல்லப் போனால் ஒவ்வொரு வருடமும் கிட்டத்தட்ட பத்துகோடி ஜனங்கள் மலேரியாவினால் வருந்துகிறார்கள்.

அலட்சியம் செய்யாதீர்கள்—மலேரியா ஜனங்களை பலஹீனப் படுத்தி, வீழ்த்தக்கூடிய ஓர் கொடிய நோய் அது ஆரோக்கியத்தையும், சக்தியையும் அழித்து, உற்சாகத்தையும் அறிவையும் மழுங்கச் செய்து விடுகிறது.

ஆதலால் தான் நீங்கள் இன்றே மலேரியாவிலிருந்து உங்களைக் காப்பாற்றிக் கொள்ள 'பாலுட்ரின்' உட்கொள்ளும்படி நாங்கள் வற்புறுத்துகிறோம். 'பாலுட்ரின்' உட்கொள்ளுவதற்கு அபாயமற்றது, சுலபமானது, மலிவானது, மலேரியாவைத் தடுக்கத் தகுதியானது. உங்களை காப்பாற்றிக் கொள்ளுவதற்கு சிறந்த வழி ஒரே அணா விலையுள்ள ஒரு 'பாலுட்ரின்' மாத்திரையை பிரதிவாரமும் ஒரு முறை சாப்பிடுவதுதான். அளவுகள் கீழே கொடுக்கப்பட்டுள்ளன.

**அபாயத்தின் சின்னங்களைக் கவனியுங்கள்:**

முதலில் குளிரால் நடுக்கம் உண்டாகும். ஜுரம் ஆரம்பமாகும். இதனால் உடம்பு முழுவதும் வியர்க்கும். தேகம் முழுவதும் வலி உண்டாகும். இந்த அறிகுறிகளை ஒரு பொழுதும் அலட்சியம் செய்யாதீர்கள்—உடனேயே டாக்டரின் ஆலோசனையைக் கேளுங்கள். மலேரியா கண்டிருந்தால், 'பாலுட்ரின்' எப்படி உங்களுடைய ஜுரத்தை சில நாட்களில் நீக்குகிறது என்பதையும் எதிர்காலத்தில் மலேரியா உங்களை அணுகாமல் எப்படி பாதுகாப்பை அளிக்கிறது என்பதையும் அவர் சொல்லுவார்.

நம்பிக்கைக்குகந்த 'பாலுட்ரின்' மாத்திரைகள் சுத்தமான, தெளிவாகத் தெரியும் காகித உறைகளில் சுற்றப்பட்டு வருகின்றன. ஒரு மாத்திரை விலை ஒரே அணா தான்.



# 'பாலுட்ரின்'

**மலேரியாவை வீழ்த்துகிறது**

## அளவுமுறை




**சிகிச்சைக்கு:** வயதானவர்களுக்கும் 12 வயதுக்கு மேற்பட்டவர்களுக்கும் ஒரு மாத்திரை. 6லிருந்து 12 வயது வரையுள்ள குழந்தைகளுக்கு அரை மாத்திரை. 6 வயதிற்கு கீழ்ப்பட்ட குழந்தைகளுக்கு கால் மாத்திரை விதம் தினந்தோறும் ஜுரம் குணமடையும் வரை கொடுக்கவும்.

**பாதுகாப்பிற்கு:** மேலே குறிக்கப்பட்ட அளவுகளை அனுசரிக்கவும். ஆனால் வாரம் ஒருமுறை அதே தினத்தில் சாப்பிட வேண்டியது.

எப்பொழுதும் 'பாலுட்ரின்' சாப்பாட்டிற்குப் பிறகு அதிக அளவு தண்ணீருடனோ அல்லது பாலுடனோ உட்கொள்ள வேண்டும் என்பதை ஞாபகத்தில் வைத்திருங்கள்.

இம்பீரியல் கெமிக்கல் இண்டஸ்ட்ரீஸ் (இந்தியா) லிமிடெட்.

ICP 73

